ஸ்ரீ

ராமஜெயம்.

கோயிற் கலம்பகம்

என்கின்ற

# திருவரங்கக்கலம்பகம்

மூலமும்-உரையும்.

இஃது

அழகியமணவாளதாசர்என்கிற

திவ்வியகவி

பிள்ளைப்பெருமாளையங்காரவர்கள்

அருளிச்செய்தது.

கோகுலாபுரம்

அருணாஜல முதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு.

திருப்பதி

இரத்தினமுதலியாரவர்களது

கலைக்கியானமுத்திராட்சரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது,

1896.

சென்னை பெத்துநாய்க்கன் பேட்டை

முத்துகிருஷ்ணன் வீதி 34-வது நெம்பர்

உ

கடவுள் துணை.

# விளம்பரம்.

இதனால் சகல கனவான்களுக்கும் தெரியப்படுத்துவதியாதெனில் சென்னை - பெத்துநாய்க்கன்பேட்டை முத்துகிருஷ்ணன் வீதி 34-வது நெம்பர் வீட்டில் ஸ்தாபித்திருக்கும் கலைக்கியான முத்திராக்ஷரசாலைத்தலைவராகிய அடியில்கண்ட என்னிடத்தில் இரணியநாடகம். கெங்கையம்மநாடகம். சயிந்தவநாடகம். பதினெட்டாம்போர்நாடகம். (வெங்கட்ராம உபாத்தியாயர்பாடிய) அரிச்சந்திரவிலாசப்முத்தையவிலாசம். அடியில்கண்ட புஸ்தகம் இன்னும் பலவித தமிழ் தெலுங்கு கிரந்தம் முதலிய வைத்ய சோதிடங்களும் விலை சாசமாகவும் விற்கிறபடியால் வேண்டியவர்கள் பெற்றுக் கொள்ளலாம்.

அகஸ்தியமகாமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய

| | | | |
|---|---|---|---|
| பெருநூலாகிய நாலுகாண்ட | | | |
| வயித்தியகாவியம்-தூஉா. | விலை அணு | 0 2 | 0 |
| ஷை புத்தகம் கிளேஸ்கடிதத்தில் | | | |
| கலிக்கோபைண்டு | விலை ரூ | 1 | 0 |
| போஸ்ட்சார்ஜ் | | 0 | 0 |
| வி. பி. மார்க்கமாய் பெற்றுக்கொள்பவர்களுக்கு | | 1 | 0 |
| தர்மாங்கதவிலாசம். | விலை அணு | 0 | 0 |
| சோதிடசந்திரநாடி. | | 0 | 10 |

10-புத்தகம் மொத்தமாய் வாங்கினால் 1 - புத்தகம் சுடன் கொடுக்கப்படும்.

பதில் வேண்டுவோர் ரிப்ளே கார்டு அல்லது அரையணாவில் அனுப்பி தெரிந்துக்கொள்ளவும்.

இப்படிக்கி

தி - இரத்தினமுதலியார்

முத்துகிருஷ்ணன்தெருவு-34 வது நெம்பர்

பெத்துநாக்கன்பேட்டை

சென்னபட்டணம்.

ஸர்வம் விஷ்ணுமயஞ்ஜகத்.



# திருவரங்கக்கலம்பகம்

## மூலமும் - உரையும்.




தனியன் நேரிசை-வெண்பா.

ஆழ்வார்முன் பின்னவர்க்கு மாமறைதந்தார்தமிழால்
வாழ்வார் மணவாளர் மாண்பவருட்-டாழ்வாரும்
எம்போ லியர்க்கு மிரங்கியரங்கக் கலம்ப
கம் போத நல்கவைத்தார் காண்.

அறுசீர்க்கழிநெடில்-ஆசிரியவிருத்தம்.

சொன்னோக்கும்பொருணோக்குந் தொடைநோக்கு நடைநோக்குந்துறையினோக்கோ. டென்னோக்குங்காண விலக்கியமாவதன்றியிதிலீடுபட்டோர். நன்னோக்கும் புத்தியும்பத்தியும்பெறுவர் முத்தியுண்டாநாவெனன்சொல்கேன், பன்னோக்க மணவாளர்பகரரம்பக் கலம்பகத்தைப் பாரீர்பாரீர்.

காப்பு-கட்டளைக்கலித்துறைகள்.

மறைப்பாற்கடலைத்திருநாவின் மந்தரத்தாற்கடைந்து
துறைப்பார்படுத்தித்தமிழாயிரத்தின்சுவையமிர்தங்
கறைப்பாம்பணைப்பள்ளி யானன்பரீட்டங்களித்தருந்த
நிறைப்பான்கழலன்றிச் சன்மவிடாய்க்குநிழலில்லையே

என்றவிக்கவிமுதல் நான்குகவியுந் துதிகவியாகமுற் கூறப்பட்டன அவைவருமாறன்றியுந் திருவரங்கேசருடைய சரித்திரங்களையுந் திருவழகின்-அவையவங்களைஎடுத்துக்கொண்டு (வெண்பாவைச்சும்புயங்கவம்வண்டம்மானைப்பாண்மதங்கி, கைக்கிளைசிற்றூசல்களிமடக்குமிக்கமறங்காலத்தழையிரங்கல்-சம்பிரதங்கார்தூதுகோலுங் கலப்ப

கத்தின்கூறு-என்னும் இக்கலம்பகம்-பாட்டியலில்-வித்துவசிரோமணியாய் விப்பிரகுலோத்துங்கராய் திருவவதாரஞ்செய்தருளிய அழகிய மணவாளதாசனவர் தொகுத்துச்சொல்லுஞ் சூத்திரமிது வாதலானும் முனிபுங்கவராகிய அகஸ்தியராற் சொல்லப்பட்ட அருந்தமிழ் மொழி வழக்கமாதலானுங்கற்கு மவர்கருத்திற்கும் நாற்குஞ்சொற்சுவை-பொருட்சுவை-தோன்றச் செய்தமையானும்-இம்மை மறுமையென்னு மிருமைக்குந்துணையாய் நன்னெறிபயக்கு மென்பதனானும் உரையெழுதவேண்டி விரும்பினமையால் சிற்றறிவுடையேனாதலால் என்னறிவினில் அறையுமிலக்கியங்களுட்சிறிது மறிந்தநானன்றேயாயினும் நன்மைபால்பயனறிந் தீடேறவேண்டுமென்னுமாசையெனக்குமென்சொல்வழிகேளாது வாதிக்கத் துடங்குதலால் நீரளவேயாகுமாம் நீராம்பற்றுங்கற்ற நூலளவேயாகுமாம் நுண்ணறிவு என்பதுவும் (தொட்டனைத் தூறுமணற்கேணிமாந்தர்க்குக் - கற்றனைத்தூறுமறிவு) என்பதுவும்போல யானறிந்தவளவின் - உரையெழுதினேனாதலால் இவ்வாறெழுதியவுரைகொண்டுந் திருவரங்கேசருடையசிறப்பினைச்சொல்லும் வேறுமுள்ள நூல்களைக்கொண்டு முழுதுணர்ந்தஅந்தணர்முதலிய மூதறிவோர்சொல்லும் உபதேசமுறைமையைக்கொண்டும் இதின்பொருளினது விரிவெல்லா மறிந்துகொள்க.

இதன்பொருள்.

இருக்குவேதம் எசறுவேதம்-சாமவேதம் அதரண வேதமென்று சொல்லாநின்ற நான்குவேதமாகியதிருப்பாற்கடலைத்தம்முடைய அழகிய நாவாகிய மந்தரகிரியென்னுமத்தினாலேகடைந்து இயலிசை நாடகமென்னுமுத்துறை முதலாகிய துறையினிடத்திற்சேர்த்திய தென்கலையின்முதன்மைபெற்ற ஆயிரப்பிரபந்தமான வதிகரசமிகுந்த அமிர்தத்தைகரியவிடத்தைக் கண்டத்திலுடைய கட்செவியாகியவணையிற்பள்ளிகொண்டருளிய ஸ்ரீரங்கநாயகனுடைய திருவடிக்கன்பாளர் கூட்டமுழுது மனங்களிகூர்ந்து பானம்பண்ணப் பரிபூரணமாக நிறைக்கப்பட்ட நம்மாழ்வாருடைய திவ்வியஸ்ரீபாதபற்பநிழல் அல்லது பிறக்கிறதுமிறக்கிறதுமாகுந் நமதிருவினை வெப்ப வேதனையால் வந்தவிடாயனது தீருதற்குப் பெகியாதவேறு நிழல்காணேனென்றவாறு.

வேதந்தொகுத்துத் தமிப்பாடல்செய்த விமலன் பொய்கைப்
பூதன்மயிலையர் கோன்புகட்சேரன் புத்தூரன் றொண்டர்
பாதந்தருந்து கண்மாமழிசைக்கு மன்பாணன் மங்கை
நாதன்மதுரகவிகோதை பாதங்க ளெண்ணுதுமே.

எ-து முன்கூறப்பட்ட நான்குவேத சாரத்தையுந்தொகுத்துத் தமிழ் மொழிப்பாடலாகச் சாற்றியருளிய திருமலநாகிய சடகோபாழ்வார் பொய்கையாழ்வார் பூதத்தாழ்வார் பேயாழ்வார் குலசேகராழ்வார் பெரியாழ்வார் தொண்டரடிப்பொடியாழ்வார் திருமழிசையாழ்வார் திருப்பாணாழ்வார் திருமங்கையாழ்வார் மதுரகவியாழ்வாரென்னுமிவர்கள் பாதமலரைப் பரமென்றடைந்து வாழ்வாமென்றவாறு.

பிடிக்கும்பர சமயக்குலக்கிரமும் பிளிறவெகுண்
டிடிக்குங்குரற்சிங்க மேறனையானெழு பாருமுய்யப்
படிக்கும்புகழெழுங்கு ராமானுஜமுனி பல்குணமும்
வடிக்குங்கருத்தினர்க் கேதிருமாமணி மண்டபமே.

எ-து தங்கள்தங்கள்சமயமே சமயமென்று மதானுசாரமாக வேறில்லையென்று பிடிவாதமாகப்பிடித்துப்பேசப்பட்டதையாயிகம் வைசேடிகம் உலகாயுதம் மயகசம் அருகம் அந்தமுதலாகியபரசமயமாகிய யானைக்கூட்டங்களை வீறிட்டலற இடிமுழக்கபபோலக்கெர்ச்சிக்கிற கண்டத்தொனியையுடையவொருஆண்சிங்கப்போலப் பராக்கிரமமுடையவர் பூலோகம்-புவலோகம்-சுவலோகம்-மகாலோகம்-சனலோகம் தவலோகம் சத்தியலோகமான மேலேழுலோகமும் அதல விதல சுதல நிதல நிராதல தராதல மகாதலமான கீழேழு லோகமுஞ்சொல்லித்துதிக்கும் புகழினையுடையவராகிய வெம்பிராமானுஜமுனிசுரநாருடைய பலபல குணாதிசயங்களையும் நாவினுச்சிரக மூநவடித்துச்சொல்லுங் கரத்தினையுடையபேர்களுக்கும் அதன்றி மற்றபேர்களுக்குக்கிடைக்குமோ வைகுந்தத்திற் திருமாமணிமண்டபமாகிய முத்திமண்டபமென்றவாறு.

வானிட்டகீர்த்தி வளர்கூறத்தாழ்வான் மகிழவந்த
தேனிட்டதார்நம் பெருமாள்குமாரர் சிவனையயன்
தானிட்டசாபந் துடைத்தாளரங்கர் சங்காழிபுயம்
நானிட்டனென்றருள் பட்டர்பொற்றாள்கதி நந்தமக்கே

எ-து வானுலகமளாவிய கீர்த்தியான தவளாநின்ற கூறத்தாழ்வானுடைய திருவுளமகிட்சியடையத்தக்கதாகியபகவாய்வாதவர் அதுவுமன்றியும வண்டுகள்படியப்பட்ட மணமாலைதரித்தருளிய ரெங்கநாயகாருளா லுதையஞ்செய்கையால் நம்பெருமாள் குமாரரென்றபதம் பேர்சொல்லப்பட்டவர் சிவனுனவர் பிரமதேவனுடைய சிரமைக்கிள்ளைதத்தமையால் பிரமதேவனிட்ட சாபத்தைத் தீர்த்தவராகிய திருவ

ரங்கேசருடைய அடையாள முத்திரையாகிய சங்கு சக்கரத்தை என திரண்டு புயத்திலுந்தரித்து நானிட்டதாக முந்நின்றிரங்கி யிரட்சித்த ருளிய பராசபட்டர் வியாசபட்டர் என்பவர்களுடைய பொற்பாத மே நமக்குக்கெதியென்று போற்றல்செய்வா மென்றவாறு.

அதிகவி-முற்றும்.



நூல்.

மயங்கிசைக்கொச்சகக்கலிப்பா.

இவை-எட்டடித்தரவுகள்-உ.

சீர்பூத்தசெழுங்கமலத் திருத்தவிசின் வீற்றிருக்கும்
நீர்பூத்ததிருமகளு நிலமகளு மடிவருடச்
சிறப்பறவைபுறங்காப்பச் சேனையர்கோன்பணிகேட்ப
நறைப்படலைத்துழாய்மார்பி னுயிருபோன் மணிவிளங்க
அரியதானவர்க்கடிந்த வைம்படையும் புடைதயங்கக்
கரியமால்வரை முளரிக்காடீன்று கிடந்தாங்குப்
பாயிரநான்மறை பரவப்பாற்கடலுற் பருமணிச்சூட்
டாயிரவாய்ப்பாம் பணைமேலறிதுயில் னினிதமர்ந்தோய்

மண்ணகந்துயர் நீக்கவானகந் தொழுதேத்துக்
கண்ணகன்சோணாட்டுக் காவிரிவாய்ப் புள்ளினத்துப்
பம்புகதிர்விசும் பிரவிபசும்புரவி வழிவிலங்கு
செம்பொன்மொழிலே ழுடுத்ததிருவரங்கப் பெருங்கோயில்
ஆணிப்பொற்றக டெரிஞ்சுமணிக் கதவுநீள்வாயின்
மாணிக்கவெயில்பரப்பும் வைரமணி விமானத்துள்
மின்னிலங்குதொடி வலயன்வலக்கை கீழ்கொடுத்துத்
தென்னிலங்கைத்திசை நோக்கித்திருநயனந் துயில்வோய்கேள்

எ-து சீர்மையுஞ் செழுமையும் விளங்கியசெவ்விய தாமரையாகிய அழகியவாசனத்தில்வீற்றிருக்கத்தக்ககுணமுண்டானசிறீதேவியும்பூமா தேவியுந் திருவடித்தாமரைகளைத் தங்கள் கைகளினால் வருடும்படியாக வுஞ் சிறகினையுடைய பறவைவேந்தாகிய கருடன் கடைப்புறங்காத் திருக்கவும் சேனைமுதலியானவர் ஏவற்றொழில்கேட்டு நிற்கவுந் தே ன்பொருந்திய துளவமாலையணிந்தருளிய திருமார்பிலே இளஞாயிறு தித்ததுபோல கிரணங்களையுமிழ்ந்து கவுஸ்துபாபரணமணியான துவி

ளங்கவும் யாவராலும் வெல்லுதற்கரிய அசுராதியரைக் கடிந்துவெ
ன்ற-சங்கு-சக்கரந்-தண்டு-வாள்-கோதண்டமாகிய பஞ்சாயுதங்களிரு
பக்கமும்நின்று விளங்கவுங் கருமைபெற்றவொருபெரியமலையானது
கமலவனமலர்கப் பூத்துக்கிடந்ததுபோல் அடிதொடங்கிப் பாயிரமாகநா
ன்குவேதமும் மும்முறை முறையாகப் பாவிப்போற்றிசெய்யத்திரு
ப்பாற்கடலிலே பெருமைமிக்க மாணிக்கமணிகளைப் பணமுடியிடத்
துண்டாகிய ஆயிரம்வாயையுமுடைய வராவணையின்மேல யோகநி
த்திரையுலினிதாகவமர்ந்தவனே அப்படியமர்ந்ததுமன்றி மண்ணுல
கத்திலுள்ளதுன்பமெல்லா மகலவும் விண்ணுலக முழுதுந்தொழுது
தோத்திரஞ்சொல்லவும் இடம்விசாலமா யகண்டகாவேரித் தீர்த்தத்தி
லேவெண்மணற் குன்றினிடத்திலே நெருங்கிய கிரணங்களையுடைய
ஆகாயத்திலேவரப்பட்ட சூரியன்றேரிற கட்டியபச்சைக்குதிரைகள்
உயர்ச்சியினாலே வழிவிலங்கிப் பங்கத்தேபோகாநின்ற செம்பொன்
னினாற்செய்த சத்தப்பிரகாரஞ் சூழ்ந்த திருவரங்கமாகிய பெருமை
மிக்க கோயிலினிடத்திலே ஆணிப்பொற்றகட்டினால்மேய்ந்து நவம
ணிகளிழைத்த கபாடனம்நீண்ட திருவாயற்படிக்குள்ளாய் மாணிக்க
மணிகளின் சோதியாகிய வெயிலெறிக்கும் வச்சிரமணியாலமைத்த
பிரணவாகாரமான விமானத்தின்மேல் மின்னற்கொடிபோ லொளிவி
ளங்கிய கொடிமுதலாகிய வாகுவலயமணிந்த அழகின்மிக்க வலது
திருக்கையைத் திருமுடிக்கீழே கொடுங்கையணையாகக்கொடுத்துதெ
ற்கின்கணுண்டாகிய இலங்கைத்திசையைநோக்கித் திருக்கண்வளர்ந்
தருளியசுவாமி அடியேன்சொல்லும் விண்ணப்பங் கேட்டருள்வாயா
கவேண்டிய தென்றவாறு.

இவை-ஈரடித்தாழிசைகள்-௬.

தேவராய்தேவர்க்குந்தெரியாதவொளியுருவாய்
மூவராய்மூவர்க்குண்முதல்வனாய்நின்றாய்நீ

போற்றுவார்போற்றுவதுன்புகழ்ப்பொருளேயாதலினால்
வேற்றுவாசகமடியேன்விளம்புமாறறியேனால்

பணித்தடங்காதிமையவர்க்கும்பங்கயத்தோன்முதலோர்க்கும்
பணித்தடங்காபுகழடியேன்பணித்தடங்கற்பாலதோ

யாங்கடவுளென்றிருக்குமெவ்வுலகிற்கடவுளர்க்கும்
ஆங்கடவுணீயென்றாலஃதுனக்குவியப்பாமோ

அனைத்துலகுமனைத்துயிருமமைத்தளித்துத்துடைப்பதுநீ
நினைத்தவிளையாட்டென்றானின்பெருமைக்களவாமோ

கருதரியவுயிர்க்குயிராய்க்கரந்தெங்கும்பரந்துறையு
ஒருதனிநாயகமென்றாலுன்புகழ்க்குவரம்பாமோ

எ-து தேவர்களாய்த்தோன்றிஅப்படியேதோன்றிய தேவர்களுக்குங்காணப்படாத ஜோதிவடிவமாயிருந்தருளியபிர்மாவிஷ்ணு ருத்திரனென்று மும்மூர்த்திவடிவமாய்த்தோன்றி அப்படிதோன்றியமூவர்க்குமுதல்வனாகிய மூலகாரணனாய் நின்றவனும் நீயே-உன்னைத்தோத்திரஞ்செய்யப்பட்டவர்கள் தோத்திரஞ்செய்வதுன்னுடைய புகழ்சேர்ந்தபொருளன்றி மற்றொன்றில்லாமையால் வேறொரு வசனமாயடியேனெடுத்துச்சொல்ல வழியறிந்திலேன் பெருமைபெற்றசெவியிலே குண்டலமாகப் பாம்பையணிந்த ஈசுரனுக்கும் நாபிக்கமலத்திற்பிறந்த பிர்மாமுதலான பேர்களுக்குஞ்சொல்லி முடியாதவுன்கீர்த்தியை அடியேனாற்சொல்லி முடிக்கப்படுவதோ யாங்களேதெய்வமென்று இறுமாந்திருக்கு மெங்கெங்குமுலகத்திலுள்ள தெய்வங்களுக்குந்தெய்வமாகிய கடவுள்நீயேயென்று சொல்லுவேனாகி லதுகொண்டுதான் உன்பெருமைக்கு அளவுசொல்லக்கூடுமோநினைவினால்நினைத்துநிதானித்தற்கரிய சகலசீவராசிகளுக்குஞ் சருவேந்திரியாமியுமாய் ஒளித்துச் சூக்குமவடிவா யெங்கெங்கும்நிறைந்திருக்கும் ஒப்பது மிக்கதுமில்லாத வொருதனிநாயகமென்று சொல்லிப் புகழ்வேனாகிலுமுனதுபுகழாகிய பெருங்கடலுக்கு அதுவொருஅணையாகுமோ எ-று

இவை-ஈரடி-அராகங்கள்-௪.

உருவெனவருவென வுளனெனவிலனென
அருவறையிறுதியு மறிவருநிலைமையை
இவரிவரிறையவ ரென்மனவுறுதியோ
டவரவர்தொழவரு சமயமுமருளினை
கடுவளிகனல்புனல் ககனமோடகலிடம்
உடுபதிகதிரவ னுருவமுமருளினை
கடிமலரடியிணை கருதினர்பெருகென
அடிநடுமுடிவற வருள்பரகதியினை

எ-து உருவமென்றும் அருவமென்றும் உள்ளவனென்றும் இல்லவனென்றும் ஒன்றோடொன்றொவ்வாமற்றடுமாறிச் சொல்வதேயல்லாமல் இதிலொன்றை மெய்யென்று திடப்படுத்தி வேதமுடிவிலேயு மறியப் படாத் நிலைமையை யுடையவனு மானாய் அது

வுமன்றி யாங்கள் வழிபடுங்கடவுளர் இவர்காணிவர்காணென்றுதிடப்படுத்தி வேதமுடிவிலேயும் அறியப்படாத நிலைமையை யுடையனுமானாய் அதுவுமன்றி சித்தத்துடனே அவரவர்;தொழும்படிக்கிடாய் ஆறுசமயபேதங்களை உண்டாக்கினவனுமானாய் அதுவுமன்றி நெடியதாகிய சாற்று நெருப்பு தண்ணீர் ஆகாயம்பூமி சந்திரன் சூரியனென்றுஞ் சொல்லத்தக்க வடிவங்களை வகுத்தவனுமானாய் அதுவுமன்றிப் பரிமள மலரையொத்த உனது இரண்டு திருவடியையுஞ்சிந்தித்தவர் பெறக்கடவதென்று ஆதிமத்தியாந்த மென்பதில்லாமையாக அளிக்கப்பட்ட வதிரகசியமான பரகதியைப் பொருந்தினவனுமாகயிருந்தாயாகில் உன்னையாவராலறிந்து துதிக்கப்படுமென்றவாறு.

இவைபெயர்த்தும்-ஈரடித்தாழிசைகள்-௪.

ஒருநாலு முகத்தவனோ டுலகீன்றா யென்பரதுன்
திருநாபி மலர்ந்ததல்லாற் றிருவுளத்தி லுணராயால் (௧)

மேருகிரி யுடலவுணன் மிடல்கெடுத்தா யென்பரதுன்
கூருகிரோ னறிந்ததல்லாற் கோவேநீ யறியாயால் (௨)

பன்றியாய்ப் படியெடுத்த பாழியா யென்பரது
வென்றியா ருனதெயிற்றின் மென்றுகள்போன் றிருந்ததால் (௩)

அண்டமெலா முண்டையென்பா ரறியாதா ராங்கவைநீ
யுண்டருளுங் காலத்தி லொருதுற்றுக் காற்றாவால். (௪)

(எ-து) ஒப்பற்ற சதுர்முகனாகிய பிர்ம்மதேவனையும் உலகங்களையும் நீபெற்றாயென்று சொல்லுவார்கள் அப்படிசொல்லப்படுவதுஉனது அழகிய நாபிக்கமலமே பெற்றதன்றி யுனதுதிருவுளத்திலே நீயறியாயே மகமேருகிரியையொத்த திரேகத்தையுடைய இரணியாசுரனுடைய பராக்கிரமத்தை அடக்கினாயென்று சொல்லுவார்கள்அப்படி சொல்லப்படுவது வுனதுகூறியநகமே யறிந்ததன்றி சுவாமிநீயறியாயே சுவேதவராக வவதாரமாய் பூமியைச்சுமந்து வலிமையையுடையவனென்று சொல்லுவார்கள் அப்படி சொல்லப்படுவது வெற்றியையுடைய உனதுகொம்பிலே யொட்டிநின்று வொருசிறிய மணற்பொடியைப்போலிருந்ததன்றி மற்றொரு பிரயாசியாகக் காணப்பெற்றதல்லவே அண்டங்களெல்லாம் நீயுண்டுவிட்டதென்று சொல்லுவார்கள் அந்தஅண்டங்களை யெல்லாம் நீயுண்ணத்தொடங்குமளவில் அதுவுனக்கொரு கவனத்துக்குங் காணுமோ காணமாட்டாதென்றவாறு.

இவை நாற்சீர்-ஓரடி அம்போதரங்கம்-௨.

நஞ்சமு மமுதமு நரகும் வீடுமாய்
வஞ்சமு ஞானமு மறப்பு மாயினை (௧)

இருவினைப் பகுதியு மின்ப துன்பமுங்
கருணையும் வெகுளியுங் கருத்து மாயினை. (௨)

எ-து கொல்விக்க நஞ்சமும்-பிழைப்பிக்க வமுதமும்-வேதனைப்படுத்த நரகமும் பரமானந்தத்தையுடைய மோட்சமு மாயினதன்றி-வஞ்சிக்கவஞ்சமும்-அறிவிக்க அறிவும்-பிறப்பிக்க பிறப்புமாயினாய் அதுவுமன்றி இருவினைப் பகுதியாகிய பிறப்பிறப்பும் புண்ணியபாவமுஞ்சுகதுக்கமுமா-யவனவன்-எதுமுன்னிலையா யிரங்கவிரக்கமுங் கோபிக்கக் கோபமுங் குறிக்கக் குறிப்புமானாய் ஆகையாற் சகலமும் உன்னைவிட்டகன்றதில்லை அதைவிட்டு நீயகன்றதுமில்லை யென்றவாறு.

இவைமுச்சீர்-ஓரடிஅம்போதரங்கம்-௪.

அலைகடல் வயிறு கலக்கினை, மவணை மதுகை யடக்கினை
மலைகட களிறு வதைத்தனை, மலைதலை கவிழ வெடுத்தனை.

இவை-இருசீர்-ஓரடி-அம்போதரங்கம்-௮.

மண்ணை விண்டனை, வெண்ணெ யுண்டனை
மருதி டர்ந்தனை, யெருத டர்ந்தனை
யுண்ணி றைந்தனை, யெண்ணி றந்தனை
யொருமை யாயினை, பெருமை மேயினை.

எ-து அலைகளையுடைத்தாய் யாவராலுங் கலங்காத சமுத்திரத்தினுடைய வயிறுகலங்க வசையற்ற மகமேருவாற் கலக்கவுங் கலக்கினாய் அதுவுமன்றிச் சுரர்களுக்கிடுக்கண் செய்கையால் அசுராதியர்களுடைய ஆண்மையை யடக்கவுமடக்கினாய் அதுவுமன்றிக் காதகனாகியகஞ்சனால் வந்துமலைக்கப்பட்ட குவலையாபீடமென்னு மதயானையினுயிர்மாண்டு விழவதைக்கவும் வதைத்தாய் அதுவுமன்றி இந்திரனாற் பெய்யப்பட்ட மழையைதடுத்துப் பசுக்குலங்களையும் ஆயர்கூட்டங்களையுங் காக்கவேண்டி கோவர்த்தனகிரியின் கொடிமுடியாகியது தலைகீழாய் மேலேயதன் விரிவுகுடையாயிருக்க எடுக்கவுமெடுத்தாய் அதுவுமன்றியும் பன்றியாக வடிவமெடுத்து முகக்கொம்பினாலேகுத்தி மண்டலமுழுதும் பிளக்கவும் பிளந்தாய் அதுவுமன்றி ஆயர்பாடியில்

அன்னையாகிய அசோதைதயிர்கடையும்போது கான்மனையிற் காயும்
பால் பொங்கிற்றென்று நீயுண்ணு முலையை வலிதிற் பறித்துவோடு
கையில் மத்தினாற் பாண்டத்தையுடைத்து வெண்ணெயையணைத்துள
டுத்துண்ணவுமுண்டாய் அப்படியுண்டதுவுமன்றிப்பின்னுங்காலினாற்
றயிர்ப்பானையையெல்லாந் தகர்த்துருட்டிக் கண்டாளடிக்கப் போரு
ளென்றுபயந்து மற்றொருத்தி வீட்டிற்புகுந்து வொளித்து அங்கு
முண்டானவுரி யெட்டாமையால் உரல்வைத்தேறிக் கல்லினாற் குழி
சையையுடைத்து வெண்ணெய் நெய்யெடுத்துண்டு கூடவந்ததோழ
ர்களுக்குங் கொடுத்து பூனைக்கும்வழங்குமளவில் வேதமுந் தேடிக்
காணாத சிறியதிருவடிச் சுவட்டின்வழியேவந்து கண்டு வாய்மடித்து
நெகிழ்த்தாம்பினா லுரலோடேபிணித்து மத்தினாலடிக்கவருகையில் அ
வ்விடத்தில் முற்காலத்திலே நாரதர்சாபத்தால் நளகூபான் மணிக்கிரீ
வனென்றுங் குபேரன் பிள்ளைகளிரண்டும் மருதமரமாய் நிற்கிறசாப
ந்தீர இரண்டுக்கும் நடுவேதவழ்ந்து அந்த மருதமரத்தை முறிக்கவு
முறித்தாய் அதுவுமன்றிக் கவுசல தேசாதிபனான நக்கினசித்தென்ப
வன் பெற்றசத்தியையென்னும் பெண்ணை விவாகஞ்செய்யும்பொரு
ட்டா யார்க்குமடங்காததாய்நின்ற யேழெருதுக்கு மேழாய்த் திருவு
ரும்கொண்டுசென்று அவ்வேழெருதின் சவுரியவலியையையடக்கித்
தள்ளவுந்தள்ளினாய் அதுவுமன்றி யெள்ளுக்கு ளெண்ணெய்போலெ
ங்கும் நிறையவும்நிறைந்தாய் அதுவுமன்றி யிவ்வளவென்றோரிலக்க
த்துக் கெட்டாமல் நிற்கவும்நின்றாய் அதுவுமன்றி யொன்றாகவுமானா
ய்ப் பலவாகவுமானாய் ஆகையாலுனது திருவிளையாட்டின் செயலையா
னென் சொல்லுவே னென்றவாறு.

எனவாங்கு—இது-தனிச்சொல்.

இது பதினான்கடி நிலைமண்டில ஆசிரியச்சுரிதகம்.

மலர்தலை யுலகத்துப் புலமைசான்ற
பதின்மரும் பணித்த பாடலோதை யொடு
முதுமறை கறங்க முரச மார்ப்ப
வலம்புரி பிளிறும் பொலம்புரி கோயி
லாழியஞ் செல்வ வாதியம் பரம
வாழி வாழி மாயோய் வாழி
நெடியோய் வாழி நின்மாட் டொன்றே
யடியேன் வேண்டுவ தஃதுநீ மறக்கேல்

பூவரு மயன்முதல் யாவரு மறியா
மூவுல களந்தநின் சேவடி வாழ்த்தித்
தொழுதகைத் தொண்டர்தந் தொண்டருட் சேர்க்கா
தெழுவகைத் தோற்றத் தின்னுப் பிறப்பி
னென்மொழி யாக்கையுட் சேர்ப்பினு மவர்பா
லன்மொழி யாமை யருண்மதி யெனக்கே.

எ-து விரிவாகிய விடமுள்ள பூலோகத்திலே புலமைமிகுந்த பதின்மராகிய ஆழ்வாராதியர் சொல்லியருளிய நாலாயிரப் பிரபந்தமாகிய பாட்டினது வோசையுடனேகூடப் பழமையாகிய சதுர்வேதங்களுஞ் சத்திக்கவும் வெற்றிமுரச முழங்கவும் வலம்புரிச்சங்கந் தொனிக்கவும் பொன்னாற் சமைத்தருளிய திருவரங்கமாகிய கோயிலினிடத்தில் அழகிய சங்காழியைத் தரித்தசெல்வனே ஆதிமூலமாயழகியபரமனே நீவாழ்வாயாக நீகண்டுவளரா நின்றவனே நீவாழுவாயாக உனதிடத்தில் அடியேன் விண்ணப்பஞ் செய்யவேண்டுவ தொன்றுண்டு அதனையில்லையென்று மறுத்துவிடாமலீதல்வேண்டும் அஃதியாதெனிற் றாமரைப்பூவிலுற்பவித்த பிரமதேவன் முதற்கொண்டு யாவரொருவராலு மளவுகாணப்படாத பூமியந்தரசுவர்க்க மென்னு மூவுலகையு மளந்தவுனது திருவடித் தாமரையை வாழ்த்தி வணங்குகின்ற தகைமைப்பாட்டினையுடைய தொண்டர்க்குத் தொண்டரானவர்களுக்குள்ளே அடியேனையு மொருவனாகச் சேர்க்கவேண்டியது அடியேன்பக்குவ னல்லாமையால் அப்படிசேர்க்கத் திருவுளத்துக்குப் பாங்கின்றிச் சேர்த்திடாமல் நான்குவகைப்பட்ட அண்டசம் சுவேதசம்உற்பீசம் சராயுசமென்னும்பிறப்பிலெழுவகைத் தோற்றமாகிய தாபரங்கள் பத்தொன்பதுலட்சமும், ஊர்வனபதினைந்து லட்சமும், தேவர்கள் பதினொருலட்சமும், நீருறைவனபத்துலட்சமும், பறவைகள்பத்துலட்சமும், நாற்காலிகள்பத்துலட்சமும் மானிடர் ஒன்பது லட்சமும் ஆகக்கூடின எண்பத்துநான்குலட்ச சீவராசியின் பேதாபேதங்களில் மிகவும் அற்பமா யென்மொழி யாக்கையாகிய புழுவாகப்பிறப்பித்தாலும் உனதுபாதாரவிந்த திருவடிகளி னிடத்துண்டாகிய அன்புவொருக்காலு மறந்துபோகாமையாகிய மதியையடியேனுக்கு அளித்தருளவேண்டு மென்றவாறு.

நேரிசைவெண்பா.

எனக்கே திருவரங்க னேபிரா னெம்மான்
றனக்கே யடிமை தமியேன்-புனக்கேழ்

மருத்துளவோன் மேலன்றி மற்றொருவர் மேலென்
கருத்துளவோ வாராயுங் கால்.

எ-று ஆராய்ந்துபார்க்குமளவில் எனக்குத்திருவரங்கத்தில்எம்பெருமானென்னும் பெயரினையுடையவனாகியும் எனக்குச்சுவாமியாகியும் புனத்திற்பசுமைமிக்க நிறமுஞ்சுகந்தமுமுள்ள துளபமாலையணிந்தவனாகியுமிருக்கிற அவன்றனக்கே தமியேனாகி அடியேன்வந்துஅடிமையானது அவனையன்றி மற்றொருவராகிய தெய்வங்களைப் பரமென்றடைந்து அவர்கள்மேலென்கருத்து நாடத்தக்கதுண்டாகுமோவாகாதென்றவாறு.

கட்டளைக்கலித்துறை.

காலா யிரமுடி யாயிர மாயிரங் கைபரப்பி
மேலா யிரந்தலை நாகங் கவிப்பவின் பூத்தகஞ்சம்
போலா யிரங்கண் வளருப்பிரான் பொன்ன ரங்கனென்றே
மாலா யிரங்க வல்லார்க் கெய்தலாந் திரு வைகுந்தமே

எ-து ஆயிரங்கால்களும் ஆயிரமுடிகளும் ஆயிரங்கைகளுமுடையவனாய் அந்தக்கைகளையெல்லாம் பரப்பிக்கொண்டு உகாந்தப்பிரளயவெள்ளத்தின்மேலே அநந்தனாகிய நாகம் ஆயிரம்பணாமுடிகளைக்கவிக்க ஆகாசத்திலேபூத்த அம்போருகபுட்பம்போலாகி ஆயிரங்கண்மலர்களை முகிழ்த்துக்கொண்டு துயின்றருளிய பிரானாகிய வெம்பெருமானெழுந்தருளியிருக்காநின்ற திருவரங்கமாகிய தலமென்று ஆசையுற்றிரங்கி மனோவாக்குகாயங்களினால் மதிக்கவுந் துதிக்கவும் வணங்கவும் வல்லவர்களுக்குப் பிரபஞ்சமாயையினது தடையின்றி அழகிய வைகுந்தத்திற் சேர்ந்திருந்து வாழக்கிடைக்குமென்றவாறு.

அறுசீர்க்கழிநெடில்-ஆசிரியவிருத்தம்.

வைகலந்த ஏழிலைவே லீசற்கும் வாசவற்கும்
வாசப் பூமேன்
மெய்கலந்த நால்வேத விரிஞ்சனுக்கு மேலாவிற்
றிருப்பர் மாதோ
பைகலந்த பாம்பணைமேற் றிருவரங்கப் பெருநகருட்
பள்ளி கொள்ளுங்
கைகலந்த நேமியான் றிருநாமத் தொருநாமங்
கற்றார் தாமே.

எ-து படத்தினையுடைய பாம்பாகிய அணையின்மேலே திருவரங்கமாகிய பெரியநகரத்தில் திருக்கண்வளர்ந்தருளிய கையில்தரித்த சக்கராயுதனுடைய ஆயிரந்திருநாமத்திலே யொருதிருநாமமாகிலுங் கற்றபேர்கள் கூர்மையுடைய சூலாயுதமேந்திய யீசுரனுக்குந் தேவேந்திரனுக்கும் வாசப்பூவான நறுமலர் நாற்றமிகுந்த தாமரையிலிருக்கும் சதுர்வேதத்துக்குரிய பிரமதேவனுக்குமேலாகியபதவியில்வீற்றிருப்பார்க ளென்றவாறு.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

கற்றா ரெனினும் பதினா லுலகுங்
கண்டா ரெனினுந் தண்டா மிகுபற்
றற்றா ரெனினுந் திருமா லடியா
ரல்லா தவர்வீ டில்லா தவரே
பொற்றா மரையாள் கணவன் றுயிலும்
பொற்கோ யிலையே புகழ்வார் பணிவார்
மற்றா ரெனினும் பெற்றா ரவரே
வானோர் திருமா மணிமண் டபமே.

எ-து சகலவேத புராணசாஸ்திர முதலானகலைகளையெல்லாங் கற்றார்களே யாயினும் மேலேழுலோகங் கீழேழுலோகமான பதினாலுலகங்களையெல்லாங் கண்டார்களேயாயினுந் திருமாலுக்கடியரல்லாதவர்களாயினராகில் அவர்கள்விடுபேறில்லாதவர்களாய்மெலிவார்கள்பொற்றாமரையாளாகிய இலக்குமிகாந்தன் துயிலாநின்ற கோயிலாகியதிருவரங்கத்தை நம்பிக்கையாய்ப்புகழவும் பணியவுந் தொடங்கினவர்கள் மேன்மக்களன்றி தீமக்களாயினும் அவர்கள்வந்து பெற்றனரன்றோ வைகுந்தத்திலே வானவர்களுந் தொழத்தக்க மாட்சிமையுடைய மணிமண்டமாகிய முத்திமண்டபமென்றவாறு.

எழுசீர்க்கழிநெடில்ஆசிரியவிருத்தம்.

மண்டலமும் விண்டலமு நின்றவட குன்றமும்
வளைந்த மலையுங் கடலுமு
தண்டமு மகண்டமு மயின்றவர் துயின்றரு
அரும்பதி விரும்பி வினவில்

கொண்டல்குமு றுங்குட கிழிந்துமத குந்தியகில்
கொண்டுநுரை மண்டி வருநீர்
தெண்டிரை தொறுந்தரள மூங்கனக மூஞ்சிதறு
தென்திருவ ரங்க நகரே.

எ-று மண்ணுலகையும் விண்ணுலகையும் நிலைநிற்கின்ற மகமேரு கிரியையும் அதைச்சூழ்ந்த மற்றமலைகளையுஞ் சமுத்திரத்தையும் பழமையாகிய அண்டத்தையும் நவகண்டமல்லாத அகண்டத்தையும் அமுதுசெய்தருளிய அருளாளர்திருக்கண்வளர்ந்த தக்கதாய்அரிதாகிய பதியை ஆசையுடனே யாதென்றுவிரும்பிக்கேட்கில் மேகங்கள் படிந்துமுழங்கப்பட்ட மேலைத்திசையிலிருந்திறங்கி மதகினைமுட்டித்தள்ளி அதிற்கட்டைகளை யுருட்டிக்கொண்டுநுரைத்துவரப்பட்டநீரிலே தெளிந்த அலைகளைமோதுந்தோறும் முத்தும்பொன்னும் சிதறப்பட்டகாவேரிநதி தீர்த்தவழகின் மிகுந்ததிருவரங்கமாகிய நகரம்-எ-று.

புயவகுப்பு-ஆசிரியவண்ணவிருத்தம்-இதுமுதலடி.

நகுகதிர்வழங்குதகடுபடுசெம்பொன் நவமணிகுயின்றதொடியணியணிந்து-ககனவிவிடுநீல வெற்பொற்றிருந்தன
நரியபுதுமன்றறிசைமுழுதுமண்டநவுகுதிகொண்ட துளவணியலங்கன்-மதுகரமொருகோடி சுற்றப்புனைந்தன
நளினமடமங்கைகுவலயமடந்தை சனகனதனங்குபொதுவர்மகளென்றிவ்-வனிதையர்தனபாரமொத்தக்குழைந்தன
நதிபதிசுழன்று கதறிறுமாசிந்த வாவகடுரிஞ்சி யலறவலமர்து-வடவரையுடரேய நட்டுக்கடைந்தன

இது-இரண்டாமடி.

இகலியிருகுன்றிலிருசுடரொழுந்து பொருவதெனவிப்பமதிமுகமிலங்கும்-இருகுழையிருபாடலைப்பச்சிறந்தன
இணையறநிமிர்ந்து வலியொடுதிரண்டு புகமொடுபரந்துபுழுகொடுபனைந்து-கலவையினணிசேறுதுற்றுக்கமழ்ந்தன
எதிரொருவரின்றியகிலவுலகுந்தன் அடிதொழவிருந்த விரணியனடங்க-மூரணியவரைமார்பமெற்றிப்பிளந்தன
எறிகடல்கலங்கிமுடையிடவெகுண்டுநிதிசரவிலங்கையரசொடுபலங்க-வொருசிலையிருகால்வளைத்துச்செவந்தன

## இதுமூன்றாமடி

மிகுகளவினின்றவிளவுகனிசிந்தி மடியவிடுகன்று குணிலெனவெறிந்து-பறவையினகல்வாய்கிழித்துப்பகிர்ந்தன
வெறிபடுகுருந்தைமுறிபடவடர்ந்து குடநடமகிழ்ந்துகுரவைகள் பிணைந்து-பொருதொழிலெருதேழுசெற்றுத்தணிந்தன
வெடிபடமுழங்கியெழுமுகிலுமண்டரொடுநிரைதியங்கவெறிதிவலைகண்டு-தடவரைகுடையாவெடுத்துச்சுமந்தன
விழிவடவைபொங்கவெதிர்பொரநடந்தகளிறுளம்வெருண்டுபிளிறிடமுனிந்து-புகர்முகவிருகோடுபற்றிப்பிடுங்கின

## இதுநான்காமடி

அகலிடமுழுப்பருலகமுநடுங்கி அபயமடியெங்களபயமெனவந்து விழுதொழுமிடையூறகற்றிப்புரந்தன
அருகுறவிளங்குமொருதிகிரிசங்கம்வெயிலொருமருங்குநிலவொருமருங்கும்-எதிரெதிர்கதிர்விசவிட்டுப்பொலிந்தன
அருமறைதுணிந்தபொருண்முடிவையின்சொல்அமுதொழுகுகின்றதமிழினில்விளம்பி யருளியசடகோபர் சொற்பெற்றுயர்ந்தன
அரவணைவிரும்பியறிதுயிலமர்ந்த அணிதிருவரங்கர்மணிதிகழ்முகுந்தர் அழகியமணவாளர்கொற்றப்புயங்களே.

எ-து ஒளிரப்பட்டவொளிகளை யுதவத்தக்க செம்பொற்றகட்டினாலும் நவரத்தினங்களினாலுஞ் செய்த கொடி முதலாகிய பூஷணங்களையணிந்து வானவில்விட்டு விளங்கப்பட்ட நீலமலையை யொத்திருந்ததுவும் நவ்விதாகிய பதுமணம் எட்டு திசைகளையும் வளைக்கத் தேன் குதிகொண்ட அழகிய துளபமாலையை வண்டினங்களானது வொரு கோடிக்குமேலும் வந்து சுற்றிக்கொள்ளத்தக்கதாகச்சூட்டினதுவும் தாமரைப்பூவில் மடமைமுதலிய குணத்தால்மிக்க மங்கையாகிய திருமகள் நிலமகள் சனகராசாவின்மகள் இடையர் மகளிர்களென்று சொல்லப்பட்ட விப்பெண்கள்மாருடனே கனத்த கொங்கைகளானது வொத்துப்படியாற் குழைந்ததுவும் சமுத்திரமானது சுழன்று கதறி நுரைகளைச்சிந்த ஆதிசேஷனாகிய அரவத்தின்வயிரைப்பட்டு மறுக்கமுற்றவற கலிபாநிலைமையுடைத்தாய் பதினாறாயிரம் யோசனை தூர மேல்நோக்கியதாய்ப் பதினாறாயிரம் யோசனை தூரஞ் சுற்றளவுடையதாய் மேல்விரிவு முப்பத்திராயிரம் யோசனை தூரமுடைத்தாய்ப் பதினாலுலகத்துக்கு மாதாரமான மகமேருகிரியினுட

லந் தேய்ந்துபோக நட்டுக்கடைந்தவும் மாறுபாட்டிரண்டுபெலையினிடத்திரு சுடரொன்னுஞ் சந்திராதித் தருதித்து ஒருவருக் கொருவர் பொருவதுபோலக் கலைநிரம்பிய மதியினது விம்பம்போன்ற திருமுகத்திலே விளங்குகின்ற யிருகுழைக ளிருபக்கம் அசையும்படிக்குச் சிறப்பித்திருந்ததுவுந் தனக்கிணையொன்று மின்றி நிமிர்தலையுற்று திண்மையுடனே கூடித்திரண்டு புகழோடும் பொருந்தி விசாலமாய் நறும்புழுகினுடனே தோய்ந்து நால்வகைச்சாந்தாகிய கலவையினலணியத்தக்கதா யிருந்ததுவும் இரணியனுடைய சவுரியமடங்க முரணிய வென்னுந் திண்ணிய மலையையொத்த மார்பினைக் கண்டித்துப் பிளந்ததுவும் அலைகளையெறியுங் கடலாகியது கலங்கி அபயமென்று முறையிடக்கோபித்து இராக்கதர்க்கிடமாகிய யிலங்கையை இராவணனுடனே நடுங்கி மயங்க வொப்பற்ற கோதண்டத்தினுடையவிரண்டு கொடியும் வளையச்செய்து சிறந்ததுவும் கஞ்சனால் விடுபட்டுக் காட்டகத்தில்வந்த வற்சாசுரனானவன் மடிய அவன் மிகுந்த கவடமாயுருவெடுத்து நின்ற குழைக்கன்றைத்தானே குறுந்தடியாகப்பிடித்துச் சுழற்றி யங்கனநின்ற விளாவின்கனிசிந்த விட்டெறிந்ததுவு மன்றி அர்த்தராத்திரியிலாயர்பாடியிலே ஆயரோடுங்கூடி யொருதாமரைத் தடாகத்தில் வரும்போது அங்குமொரு அசுரசன் குருக்காகிய புள்ளாய் விழுங்குதலும் அப்புள்ளின் தகன்றவாயைக்கிழித்துப் பகிர்ச்சியாகப் பகிர்ந்ததுவுங் மணங்கமழுங் குருந்தமரமானது முறிபடும்படியாய் நெருங்கிக் கையைக்கொட்டிக் குவிக்குங் குடமென்னுங்கூத்தை மகிழ்ந்தாடியதுவும் அதுவுமன்றிக் கைகளைக் கோத்தாடலாகிய குரவையாடலைப் பிணைத்தாடி மற்றொருதொழில் எல்லவரை இத்தனையுஞ் செயித்துச் சினந்தணிந்ததுவும் அண்டமுகடும் வெடிக்கமுழங்கியாயர்கூட்டமுந் திகைக்கச் சத்தமேகமுங்கூடிக்கொண்டு கற்களை விட்டெறிவதுபோலச் சொரியுமழையைக்கண்டு விலக்க விசாலமான கோவர்த்தனகிரியைக் குடையாயெடுத்துச் சுமந்ததுவுங் கண்ணிலே வடவாக்கினிப்போல பொறிபறக்க வெதிர்த்துப்பொருதவந்தயானை மனந்திடுக்கிடப்பயந்து வீரிட்டலற முனிந்துபுகராகிய புள்ளிபாய்ந்த

முகத்தையுடைய அந்ரமத்த கெஜத்தின்கொம்பு இரண்டையுப்பற்றி ப்பிடுங்கினதுவும் மண்ணுலகமும் விண்ணுலகமும் நடுநடுங்கியவையய மையய மடியோங்கவென்றடைந்து திருவடியிற் றெண்டனாக விழுந் தோறும் அவர்களுக்குற்ற விடுக்கண்டவிர்த்துக் காத்ததுவு மிரண் டருகிலுமுற்று விளங்குங் கீர்த்தியோர் மேலெறிகின்ற சக்கரமுஞ் சங்கும் ஒருபக்கத்திற் சூரியனது வெயிலுமொருபக்கத்திற்சந்திர னாநிலவுமொன்றுக் கொன்றெதிர்த்து ஒன்றின்மேலொன்று கிரணங் களைவிட்டெறிக்கச் சிறப்பித்ததுவும் அரிதாகிய வேதத்திற்றணிந் துசொல்லியவேதாந்தப்பொருளை இனியசொல்லாகிய வமுதமொழு கப்பட்ட தமிழினாலோதியருளிய சடகோபாழ்வாருடைய சொல்லா கியபாமாலையைச்சூட்டப் பெற்றுயர்ந்ததுவும் யாதென்னிற் பாம்பா கியவணையை விரும்பி யதன்மேல் யோகநித்திரையா யமர்ந்தருளிய திருவரங்கேசா நீலமாணிக்கம்போல விளங்கிய முகுந்தர் அழகியம ணவாளரானவருடைய வெற்றியைப்பொருந்திய தோள்கள்-எ-று.

நேரிசை-வெண்பா.

புயனான் குடையானைப் பொன்னரங் கத்தானை
அயனாந் திருவுந் தியானை-வியனாம்
பரகதிக்குக் காதலாய்ப் பாடினேன் கண்டீர்
நரகதிக்குக் காணாம னான்.

எ-து சதுர்ப்புயங்களை யுடையவனைத் திருவரங்கமாகிய தலேச்சுர த்தையுடையவனைப் பிர்மதேவனைப்பெற்றவுந்திக்கமலத்தையுடைய வனை அடியேனாசையாய் எதுவேண்டிப் பாடினேனென்பீராகில் நரக த்தையுடைய எமலோகத்தைநாடாமல் பலனதிகமாகியகதியையுடை யபரலோகமே யடையவேண்டுமென் னும்பரிவினாலேபாடினேன்கண் டீரோ வென்றவாறு.

கட்டளைக்கலித்துறை.

நானந்தவைகுந்தநாடெய்திவாழிலென் ஞாலத்தன்றி
யீனந்தவரதிநிரயத்துவீழிலென்யானடைந்தேன்
கோனந்தன்மைந்தனைநான்முகன்றந்தையைக்கோயிலச்சு
தானந்தனையெனக்காராவமுதையரங்கனையே

எ-து நானிந்தஞாலமாகிய பூமியின் கண்ணெல்லாம் அந்தவைகுந் தமாகிய நாட்டினிடத்திலுஞ்சென்று வாழமாட்டேன் ஈனமாகிய வீ டாளுக நரகத்தினிடத்திலுஞ்சென்று வீழமாட்டேன் எனக்கொரு பற்றுக்கோடாத ஒருவனைப் பரமென்றடைந்து விட்டேன் அவனா ரோவென்னில் ஆயர்குலாதிபனான நந்தகோபாலனுக்கு நந்தனானவ

ன்நான்முகனானபிதாவுக்கு பிதாவானவன் கோயிலாகியவரங்கத்திலச்சுதானந்தனானவன் அதுவுமன்றி உண்ணுந்தோறுமுண்ணுந்தோறும் எங்களுக்குத் தெவிட்டாதவமுதத்தையொத்த அரங்கநாயகனையே அடைந்தே னென்றவாறு.

எண்சீர்க்கழிநெடில்ஆசிரியவிருத்தம்.

அரவினடித்தானு முரவிலொடித்தானும்
  அடவிகடந்தானும் புடவியிடந்தானும்
குரவைபிணைத்தானும் பரவையணைத்தானும்
  கோசலைபெற்றானும் வீசலையுற்றானும்
முரனையறுத்தானுங் கரனையொறுத்தானும்
  முத்தியளித்தானும் பத்திலிளித்தானும்
பரமபதத்தானுஞ் சாமவிதத்தானும்
  பாயல்வடத்தானுங் கோயிலிடத்தானே.

எ-து அரவமாகிய காளிங்கன் முடிமேல்நின்று நடித்தவனும் உரமுடையவுமாபதிவில்லையொடித்தவனும் அடவியாகிய வாரணியத்தில் மாதாபிதாவாக்கியப்படிக்கு நடந்தவனும் புடவியாகிய பூமியை யேனமாயெடுத்தவனும் குரவையாகியகூத்துக்குக்கையைக்கோர்வையாகப்பிணைத்தவனும் பரவையாகியவுவரியைப் பருப்பதங்களாற் றிருவணைசெய்தவனுங் கோசலையான தசரதன்றேவிப்பிள்ளையாகப் பெற்றவனும் விசப்பட்டவலையாகிய சிரசாகரத்திற் கண்டுயிலுற்றவனும் முரனாகிய வசுரன்முடியையறுத்தவனும் கரதூஷணன்முதலாகிய வரக்கரைவெறுத்துக் கடந்தவனும் தன்னைவினையத் தலைவனையறிந்த தபோதனருக்கு முத்தியைக்கொடுத்தவனும் குவலயாபீடமென்னும் அத்தியை மதமடக்கினவனும் அன்றியும்அத்தியாகிய யானை ஆதிமூலமென்றழைத்தவனுமாம் பரமாகியபதத்தையுடையவனுஞ் சரமுபாயமாகிய சுக்ரீபனும் பாயலாகப்படுக்குமிடமாக வடபத்திரத்தைமகிழ்ந்தவனுமாரோவென்னில் கோயிலாகியபீடமே குடியாகிய வரங்கநாயகனேயாகு மென்றவாறு.

கட்டளைக்கலித்துறை.

தானேதனக்கொத்ததாட்டாமறைக்குச்சரண்புகுந்தாள்
ஆனேனினியுன்னருளறியேனெனதாருயிரே

தேனேயென்றிவினைக்கோர்மருந்தேபெருந்தேவர்க்கெல்லாங்
கோனேயரங்கத்தரவணைமேற்பள்ளிகொண்டவனே

எ-து என்னுடையவுயிர்க்குயிரானவனே அப்படியுயிர்க்குயிராகும் ஒழிபாதவின்பத்தை யுதவு நலாந்தேனிலுமிரதித்தவனேயெனது தீவினையாகிய பிரவித்துன்பத்திர்ப்பதற்கொரு அருமருந்தானவனே பெருமைமிக்க தேவதேவாதிபனே திருவரங்கத்திலே பாம்பணையில் பள்ளிகொண்டவனே தனக்குத்தானே ஒப்பாகிய உனது சரணாரவிந்தத்துக்கே சரணடைந்த அடிமையானேன் இனிமேலுனது திருவருளிருந்து நடத்தும்படி யின்னதென்றறியேனென்றவாறு.

மேகவிடு தூதுநேரிசைவெண்பா.

கொண்டல்காளும்மைக் குறித்தேதொழுகின்றேன்
அண்டர்காணரங்கத் தம்மானைக்-கண்டு
மனத்துளவத்தைப்படுமென் மையலெல்லாஞ்சொல்லி
புனத்துளவத்தைக் கொள்நீர் போய்.

எ-து வாருங்கள்மேகங்காள் உங்களைக்குறித்துத்தொழுகிறேன் ஈவர்களாலுமளவிட்டுக்காண்பதற்கரியதிருவரங்கத்திலே எமக்குச்சுவாமியாயிருந்துள்ளவனை நீங்கள்போமளவிற் கண்டுசந்தித்து எனக்கெய்தாமையினு ளிருதயத்திலிடர்ப்படலாகிய எனது மையலாகிய வாதையைபறிக்கையை தெரியப்படுத்தி அவரணிந்த புனத்திற் பச்செல்றபகந்துழாய்மாலையைக்கொண்டு வரவேணுமென்றவாறு.

கலிவிருத்தம்.

போயவனிற்சிலபுறச்சமயநாடும்
பேயறிவைவிட்டெழுபிறப்பையுமறப்பீர்
ஆயனையனந்தனையனந்தசயனத்தெம்
மாயனையரங்கனைவணங்கிமருவீரே.

எ-து வாரீருலகத்தீர்காள் மனத்திடமின்றி வையங்சடோறம்லத்திகிரிபோற் சுற்றித்திரிந்து சித்தப்பிராந்தியாய்ப் பலபல சமயங்களைப் பயனின்றியே நாடப்பட்டபேதமையாகிய பேயறிவைக் கைவிட்டு யெழுவகைப்பட்ட பிறவியின் வேரைக்களைத்து பிறவாமையாகிய வீட்டின்பத்தை மேவுவீர்கள் ஆயனான நந்தகோபாலனை யனந்

தனானவனை யனந்தனான சேஷயனத்திற் றிருக்கண் வளர்ந்தருளிய வெம்முடைய மாயவனை திருவரங்கத்தையுடையவனை வணங்கியவருடைய திருவடித்தாமரையேஸ்திரமென்று சேருவீராகவேணும்-எ-று

எண்சீர்க்கழிநெடில்ஆசிரியவிருத்தம்.

மருவதந்தையுங்குருவுமெந்தைய
மருள்கெடுப்பதும்மருள்கொடுப்பதும்
உருகுநெஞ்சமும்பெருகுதஞ்சமும்
உரியஞானமும் பெரியவானமும்
திருவரங்கனாரிருவரங்கனார்
செங்கண்மாயனாரெங்களாயனார்
அருண்முகுந்தனார்திருவைகுந்தனார்
அமலநாதனார் கமலபாதமே.

எ-து மருவிவளர்க்கப்பட்ட மாதாபிதாவுந் தேசிகனுந் தெய்வமும்மருளைக்கெடுக்கப்பட்டதும் அருளைக்கொடுக்கப்பட்டதும் உருக்கமுள்ளநெஞ்சமும் பெருக்கமுள்ளதஞ்சமாகியபற்றுக்கோடும் உரிதாகியஞானமும் பெரிதாகியவானமென்னும் பரலோகமுமானதுவும் எதுவோவென்னில் இங்ஙனஞ்சொன்னதொன்றுமல்ல திருவரங்கமாகியகோயிலையுடையவர் திருவரங்கராகிய ஈசுரனையும் பிர்மாவையுந் தமதங்கத்திலுமுடையவர் செங்கமலம்போன்ற திருநயனத்தையுடைய மாயனானவர் எங்களுக்கிசைந்த வாயனென்னும் நந்தகோபனானவர் அன்றியும் அருளுருவமான முகுந்தனானவர் ஸ்ரீவைகுந்தத்தில் வாழப்பட்டவர் அமலனாகியநாதனானவ ரங்கநாயகருடைய திருவடித்தாமரையே அப்படிக்கெல்லாமான தென்றவாறு.

எண்சீர்க்கழிநெடில்-ஆசிரியவிருத்தம்.

பாதியாயழுகியகால்கையரேனும்
பழிதொழிலுமிழிகுலமும்படைத்தாரேனும்
ஆதியாயவனையாயென்பராகில்
அவரன்றேயாம்வணங்குமடிகளாவார்
சாதியாலொழுக்கத்தான்மிக்கோரேனுஞ்
சதுர்மறையால்வேள்வியாற்றக்கோரேனும்
போதினான்முகன்பணியப்பள்ளிகொள்வான்
பொன்னரங்கம்போற்றாதார்புலையர்தாமே

எ-து பண்ணுதபாவங்களைப் பண்ணிப் பாதியாயழுகிப்போன கரசரணாதிகளையுடையரோயாயினும் பழிப்புக்கிடமாகிய தொழிலையிழி

வாகிய குலமுமுடையவரேயாயினும் அவர்கள்வந்து அன்புடனேவாக்குமனதுக்கு மளவிடப்படாத வாதிபானவனே அரவணையிலமர்ந்தருளு மாதிகேசவனேயென்று ஒருதரஞ்சொல்லுவார்களேயாகி லவர்களேகண்டீர் நாங்கள் நமஸ்கரிக்கப்பட்டநாயன்மாரானவர்கள் அதுவன்றிச் சாதியினாலுமொழுக்கத்தினாலு முயர்ந்தவர்களே யானாலும் வேதபாராயணத்தினாலேயும்வேள்விசெய்வதினாலுமேதக்கதமையை போரானாலுந் தாமரையிற்பிறந்த சதுர்முகப்பிர்மாவந்துபணிந்துபூசிக்கப் பாம்பணையிற்பள்ளிகொண்ட பரமபுருஷோத்தமனுடையபொன்னரங்கத்தைப்போற்றி செய்பாதொழிவார்களேயாகில் அவர்கள்கடைபருக்குங் கடையரேயானபேர்களென்றவாறு.

கட்டளைக்கலித்துறை.

புலைபாம்பிறவிபிறந்தென்செய்தோம்பொன்னிபொன்கொழிக்கும்
அலைபார்திருவரங்கத்தெம்பிரான்மதன்னையோடும்
கொலைபாதகானனங்கடந்தவந்நாட்கடந்தோறும்புல்லாய்ச்
சிலைபாய்க்கிடந்திலமேநெஞ்சமேகழறீண்டுகைக்கே

எ-து பொய்மையாகிய கடைப்பட்டசெனனத்தை யெடுத்தென்னபலனைபடைந்தோம் ஏழைமனமே பொன்முதலாகிய மணிகளைக்கொழிக்குமலைகணிரம்பி யகன்றகாவேரியினிடத்திலே அழகியவரங்கத்திலுள்ளவனாகிய வெம்முடையபிரானானவன் எனதுதாயாகிய சீதாபிராட்டியாருடனே கூடநடந்துநடக்குதற்கரிய காட்டைக்கடந்து சென்றவக்காலத்திலே அவர்கடந்தருளிய அவ்வழிகள்தோறும் புல்லாயாகிலுங் கல்லாயாகிலும் பிறந்துகிடக்கவானாலும்தவஞ்செய்துகொள்ளமாட்டாமற்போனோமே அவரது திருவடிகளையடையும்பொருட்டென்றவாறு.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தீண்டாவழும்புஞ்செந்நீருஞ்சீயுநரம்புஞ்செறிதசையும்
வேண்டாநாற்றமிகுமுடலைவினைசுமந்துமெலிவேனோ
நீண்டாதூண்டாவிளக்கொளியாய்நின்றாயொன்றாயடியாரை
ஆண்டாய்காண்டாவனமெரித்தவரங்காவடியேற்கிரங்காயே

எ-து தீண்டத்தகாத அருவருக்கப்பட்ட வழும்பும் உதிரமுஞ்சீழுநரம்புமிடைக்கிடையே செறியப்பட்டமாங்கிஷமும் விரும்பப்படாததுர்க்கமிகுந்த பலபாண்டமாகிய வுடம்மைப் பொல்லாதவினையைச்செய்த அடியேனெடுத்துச்சுமந்து மெலியக்கடவேனோ. குறளுரு

வமாய் நீண்டுவளரா நின்றவனே தூண்டாதசுடரினது சோதிப்பிரகாசமான விளக்கொளியாயெங்கும்பரந்து நின்றுமென்பது அறிந்திறந்துமறிந்துகொள்ளமாட்டாத மூடத்தன்மையையுடையேனையும் ஒருபொருளாயாட்கொண்டருளினவனே காண்டாவனந்தகனஞ்செய்தருளியவரங்கநாயகனே அடியேன்கடைத்தேறும்படிக்குத் திருவுளத்திரங்கி இரட்சிக்கவேண்டுமென்றவாறு (அடியேனையாண்டாயென்பதமைபரமற்பின்னு மாங்காவடியேற்கிரங்காயேயென்றுசொல்லவேண்டுமோ வென்னில் மேகமானது உயர்நிலைச்சுத்தோதகயாச்சிவைத்தாலு மற்றுமுருண்டோடிப் பழயபடிக்கு உவர்நீராமாறுபோல் அப்படியாண்டருளினாலும் அஞ்ஞானத்தாற் கலங்கித்திருப்பித் தேடமலருள்வேண்டுமென்பதுகருத்து.

தவம்-கலிநிலைத்துறை.

காயிலைதின் றுங்கானிலுறைந்துங்கதிதேடித்
தீயிடைநின் றும்பூவலம்வந் துந்திரிவீர்காள்
தாயினுமன்பன்பூமகணன்பன்றடநாகப்
பாயன்முகுந்தன்கோயிலரங்கம்பணிவீரே

எ-து காயிலைமுதலாகியகந்தமூலபலங்களைப்பட்சித்தும் வனவாசஞ்செய்தும் கெதியைவிருப்பிப்பஞ்சாக்கினிமத்தியிலிருந்தும் அரிதாகியதபசைச்செய்தும் பூமியிற்பிரதட்சணமாய்வந்துந்திரியப்பட்டவர்களேசொல்லக்கேளீர் அன்னைபிதாவிலுமதிகமான அன்புண்டானவன்பூமகளாகிய சீதாதேவிக்கு நண்பனாகச்சிதாமெனன்திருக்கின்றவன் விசாலமானபாம்பாகிய பாயலிற்பள்ளிகொண்டருளிய முகுந்தனானவன் அப்படியானவனுடைய கோயிலாகிய திருவரங்கத்தைச்சென்றுகண்டுவணங்குவீர்களாகவேண்டும் அப்படிவணங்கில் வடந்தாயலெளிதிற்றானெயெல்லாப்பலனையுமடைந்துய்யலாமென்றவாறு.

இதுவும்-அது-கட்டளைக்கலித்துறை

வீரங்காகியவைவனைமாற்றிவிடவாவின்
போரசங்காகநடித்தபொற்றுள்பற்றிப்பொன்னிநன்னீர்
சீரங்கா நின்றெழும்பநெண்றேசிந்தைசெய்யிலது
கூரரங்காநெஞ்சமேவஞ்சமாய்க்கொடுவினைக்கே

எ-து சோத்திரந்-தொக்கு-சட்சு-சிங்குவை-யாக்கிராணமென்னும் ஐம்பொறியாகிய விவற்றின்வழித்தான்சத்த-பரிச-ரூப-ரச-கெந்தமெ

ன்னுந்தன்மாத்திரையாகிய வைம்புலவேடராகிய வீரர்களாலலைத்தே மூநெஞ்சின்றினை ஞானவாளால்மடித்து நஞ்சையுடைய நாகபடத் தினின் றதன்போராகிய பூசலையசடாரங்களாக வாடியருளிய வழகிய திருவடிகளையடைந்து பொன்னியாகியகாவேரியின்புண்ணியதீர்த்தச் சிறப்பினையுடைய திருவரங்கேசனே யானுன் னுடைய அடியாற்குபடி-யனு னவடிமையெனவகரைந்துருகிநெஞ்சமே நீகணப்போதாகிலுங் கருதினதுண்டாகில் அதுவேபற்றுக்கோடாகவந் துநம்மைவஞ்சித்து மயங்கப்பண்ணுங் கொடியவினையென்று மிரும்பிற்குஞ்சூரியஅரமாம் அதையறுத்துத் தள்ளுதற்கென்றவாறு.

நேரிசைவெண்பா.

கேசவனையேசெவிகள்கேட்கத்திருவரங்கத்
தீசனையேசென்னி யிறைஞ்சிடக-நேசமுடன்
கண்ணனையேகாண்கவிரு கண்ணினர்கொள்காயாம்பூ
வண்ணனையேவாழ்த்துகவென்வாய்.

எ-து என்னுடைய அவையவங்களி லிரண்டுசெவிகளும்எவ்விடத் திலுமெக்காலத்திலு மெத்துன்பமெய்துமிடத்திலு மற்றொன் றுங்கே ளாமற் கற்றுனந்தமாய்க் கேசவனுடைய கீர்த்தியையே கேட்கக்கட வது அன்றியும்என் னுடையசென் னியாகிய சிரம்மற்றொரு தெய்வங் களை வணங்காமல் திருவரங்கேசனாகிய தெய்வத்தையேவணங்கக்கட வது அன்றியுமென் னுடைய வாயானது வீணிலேவொன்றைத் துதி யாமல் காயாம்பூவண்ணனாகிய கடவுளையேதுதிக்கக்கடவதென்றவா

இரங்கல்-எழுசீர்க்கழிநெடில்-ஆசிரியவிருத்தம்.

வாயினிரங்கினையாரமறிந்தனைவால்வளைசிந்தினை தண்
பாயலையுந்தினைமாலையடைந்தனைபாரினுறங்கிலையால்
கோயிலரங்கனைமாகனகந்திகழ்கோகனகப்பொலியும்
ஆயிழைநண்பனைநீயும்விரும்பினையாகுநெடுங்கடலே.

எ-து வாராய்நெடியகடலே என்னைப்போலநீயுங்கோயிலாகிய திரு வரங்கத்தி லுள்ள வரங்கநாயகனைப் பெருமைமிக்க கனகமயமாய்க் கதிர்விட்டிலங்குங் கமல மலரிற் பொலிவுபெற்ற வாயிழை யாகிய சமலைக்கு நட்பான காதலனை விரும்பினவ ளாகவேண்டும் அஃ

தெத்தன்மைத் தென்னையாகில் அவர்வந்தணையாத வாற்றாமையினால் யான்வாயினாலிரங்கிப்புலம்புகிறதுபோல நீயுமுன்வாயினாலிரங்கிப்புலம்புகிறாய் அதுவுமன்றியான் ஆபரணமான முத்தங்கங்களைவெறுத்தெறிவதுபோலநீயும் ஆரமானமுத்தங்களை வெறுத்தெறிகிறாய் அதுவுமன்றி யான்வால்வளையாகிய கையிலணிந்தவெள்வளைகளைச்சிந்திவிடுகிறதுபோல நீயும் சங்கங்களாகிய வெள்வளைகளைச் சிந்திவிடுகிறாய் அதுவுமன்றியான்கண் படைகொள்ளுந்தன்மைபொருந்திய பாயலைவிரும்பாமற்றள்ளிவிடுகிறதுபோல நீயும்பாயப்பட்ட அலையாகிய பாயலைத்தள்ளிவிடுகிறாய் அதுவுமன்றி யான்மயலாகிய மாலையடைந்ததுபோல நீயுமருளின்தொழுங்காகிய மாலையடைந்தாய் அதுவுமன்றி யானிரவொருகமா யுறங்காமைபோல நீயுமுறங்காமையாயிருக்காய் ஆகையால்யானொருத்தியு மிவ்வாறாயினேனென்றிருந்தேன் என்னோடொக்கநீயு மிவ்வாறாயினையோவென் றுதலைவிகடலின் மேல்வைத்திரங்கின தெனறவாறு. மாலையடைந்தாயென் பதற்கு மாலென்பது பெருமையாதலாற் பெருமையையடைந்தா யென்றுரைப்பாருமுளர். (உச)

இதுவும்அது-கலிவிலைவண்ணத்துறை,

கடல்வழிவிடவிசிசரர் பொடிபடவிருகண்சிறி
வடகயிலையிலெழு விடைதழுவியதுமறந்தாரோ
அடலறவமளியிலறி துயிலமருமரங்கேசர்
இடர்கெடவருகிலர் முருகலர்துளவுமிரங்கரரே,

(எ'து) முற்காலத்திற் சிதையென்னுமொருபெண்ணை வேண்டிக்கடலானது அஞ்சிவழிவிட்டுவணங்கச் சேதுபந்தனஞ் செய்துபோய் இலங்கையிலுண்டான இராவணன்-கும்பகர்ணன்-முதலான அரக்கரெல்லாமாண்டு தூளிபடலமாகத் திருக்கண் சிவந்ததுமன்றி மற்றும் வெள்ளிமலையிலும் விசேஷித்து விளங்கப் பட்டவிடைகளாகிய எருதுகளேழையுஞ் சத்தியையென்னுமொருபெண்ணுங்காத்தழுவியவளை மணந்ததுவுமறந்துவிட்டாரோ வென்னவேமறவாமல் செய்தாரெனப் படுமாதலால்என்னுடைய விடருங்கெடும்படிக் கிசைந்துவந்தணைந்தாருமல்ல அப்படியணைவதற் கிசையாராகில் துளவமாலையையாகிலு மிரங்கித் தந்தவருமல்ல வலியினையுடைய அரவாகியவமளியில் யோகநித்திரையா யமைந்தருளிய வரங்கநாயகரானவராதலால் அவரருளானது ஒருதன்மையா யிருந்திலதென்னென்றவாறு. (உஉ)

நேரிசை-வெண்பா.

இரங்கத்தனித்தனியே யெய்துகின்றதுன்பத்
தரங்கத்தையேகாற் றடுப்பீர்-அரங்கர்க்குக்
கஞ்சந்திருப்பாதங் கார்மேனியென்றவர்பால்
நெஞ்சந்திருப்பாத நீர்.

(எ-து) சமுசாரமாகிய சாகரத்திலழுந்திக் தளர்ச்சியுற்றிரங்கும்படிக்குத் தனித்தனியே யொன்றின்மேலொன்றா யோயாமலோடி வரப்பட்ட மாயாவிகாரமாய் மட்டிறக்கரியமனோதுக்கமாகிய தரங்கமென்னு மலைகளையே கைக்கொண்டு தடுத்தும் வீரேழைகளால் அரங்கநாயகனுர் கம்போருகம்போலும் அழகியதிருடியே அறுங்கார்மேகம்போலுங் கரியதிருமேனியென்றும் உவமிக்கப்படாமைக்கு வமித்துய்யவேண்டித் தியநெறிக்கட்செல்லுஞ் சித்தத்தை அந்நெறிக்கட்செல்லாமல் அவர்பாலிற்செல்லத் திருப்பமாட்டாதநிட சித்தமில்லாத நீங்களென்றவாறு. ()

இரங்கல்தாழிசை.

நீரிருக்குமடமங்கைமீர்கிளி கடாமிருக்குமதுகரமெலாம்
நிறைந்திருக்கமடவன்னமுன்ன நிரையாயிருக்கவுரையாமல்யான்
ஆரிருக்கிலுமென்னெஞ்சமல்லாதொருவஞ்சமற்றதுணையில்லையென்
றுதரத்தினொடுதூதுவிட்டபிழையாரிடத்துரைசெய்தாறுவேன்
சீரிருக்குமறைமுடிவுதேடரியதிருவரங்கரைவணங்கியே
திருத்துழாய்தரில்விரும்பியேகொடுதிரும்பியேவருதலின்றியே
வாரிருக்குமுலைமடர்மடந்தையுறைமார்பிலேபெரியதோளிலே
மயங்கியின்புறமுயங்கியென்னையுமறந்துதன்னையுமறந்ததே

(எ-து) வாருங்கள் மடப்பத்தினையுடைய மங்கைமீரே என்மனதிற்கிசைந்த நீங்களனைவருமிருக்க நானுகையால்வளர்த்த கிளிகளுமென்கையிலிருக்க மனக்களுக்காகவராகினறவண்டுசாதிகளும்நிறைந்திருக்க மடமையையுடைய பேடையன்னங்களும் முன்னே நிரைநிரையாயிருக்க இவையெல்லாம் நம்பாமலெவர்களிருந்தாலும் என்னிதயத்தைவிட வேறொரு விசுவாசமான துணையில்லை யென்று விசாரித்துத் துணிந்து ஐயப்படாமலாதரவினுடனே யதைத்தூதனுப்பி யான்மோசம்போன பிழையை நாணமின்றி முகம்பாராதாரிடத்திலே சொல்லியாறப்போறேன் அவையாதெனில், என்னிதயமான செய்திச்சிறப்பினையுடைய வேதமுடிவிலேயும் திருவரங்கரைக்கண்டு சேர்ந்துதெண்டஞ்செய்து விண்ணப்பஞ் செய்கையால அவரிரங்கித்திரு

த்துழாய் மாலையைக்கந்தாராகில் விரும்பிவாங்கிக்கொண்டு திரும்பிவர வேணுமென்பதில்லாமல் கைச்சார்ந்தகனதனத்தையுடைய மலர்மடந்தையாகிய மகாலட்சுமி வாசமாகியவர்மார்பினுடையஅழகிலேயும்பெரிதாகிய தோளினையுடைய அழகிலேயுமயங்கி இன்பமுறபபொருந்திஎன்னையுமறந்து தூதாகப்போன தன்னையுமறந்துவிட்டதாகிஉலகத்திலே அன்பத்திற்கியாரேதுணையவர் தம்முடையநெஞ்சந்துணையலவழியென்பதென்னிடத்திலிருக்கயான்யாரைவெறுப்பேனென்றவாறு. (உச)

இதுவும்அது-நேரிசைவெண்பா.

மறக்குமோகாவின் மதுவருந்தியப்பால்
பறக்குமோசந்நிதிமுன் பாமோ-சிறக்கத்
தருவரங்கள்கேட்குமோ தாழ்க்குமோநெஞ்சே
திருவரங்கர்பாற்போனதேன்.

(எ-து) நான்நமதுதிருவரங்கேசரிடத்திலே தூதாகச் செலுத்தினவண்டானது அங்ஙனஞ்சென்றவுடனே யென்னைமறந்துபோய் விடுமோ அல்லவென்று பூங்காவிலேபோய்ப் புஷ்பங்கடோறும் மதுக்களைமவழ்ந்துபானம்பண்ணி அப்பாற்பறந்து தான்போய் விடுமோஅல்லவென்று சந்நிதிக்குமுற்பட்டு நிற்குமோஅல்லவென்று சிறப்பிக்கும்படிக்கு அவர்தரப்பட்ட வரங்களைக் கேட்டு நிற்குமோஅல்லவென்று சற்றுத்தாழ்ந்துதானிற்குமோ யானிவ்வகைத்தோன்றியாது மதிக்கிலேன் என்செய்வேனென்றவாறு. (உரு)

அம்மானை-மடக்குத்தாழிசை.

தேனமருஞ்சோலைத் திருவரங்கரெப்பொருளும்
ஆனவர்தாமாண்பெண் ணலியலர்காணம்மானை
ஆனவர்தாமாண்பெண்ணலியலரேயாமாகில்
சானகியைக்கொள்வரோ தாரமாயம்மானை
தாரமாய்க்கொண்டதுமோர் சாபத்தாலம்மானை.

(எ-து) வண்சோதிகள்மருவாநின்ற பூங்காவனஞ்சூழ்ந்த திருவரங்கத்தினிடத்திலே யெம்பெருமானெழுந்தருளி யிருக்கப்பட்டவர்ஆணுமல்லாத பெண்ணுமல்லாதவர் அலியுமல்லாதவரூகில்சானகியாகிய சீதையைத்தாரமாய்க் கொள்கைக்குத்தகுமோ வென்றில் அம்மானையப்படித்

தாரமாகக்கொண்டது மொருசாபமாகிய வில்லை யொடித்ததனால் அம்மானையென்றவாறு. (அறியதுபாடிலம்மானையாதலால் அப்படித்தாரமாய்க்கொண்டது வொருசாபகாரணத்தா லென்றாள்ளுரையுரைத்தமையுமறிந்துகொள்க.) (உசு)

இரங்கல்-மடக்குத்தாழிசை,

மானையெய்தவரின்னமென்மடமானையெய்திலர்நேமியால்
  மாலைதந்தவர்பைந்துழாய்மதுமாலைதந்திலரிந்திரன்
சோனைமாரிவிலக்கிவிட்டவர்சொரிகண்மாரிவிலக்கிலார்
  சுரர்களுக்கமுதங்கொடுத்தவர்சோதிவாயமுதங்கொடார்
தானையைவர்கொடிக்களித்தவர்தானைகொண்டதளிக்கிலார்
  சங்கரற்கிரவைத்தடுத்தவர்தையலுக்கிரவைத்தடார்
ஆனைமுன்வருமன்புளார்முலையானைமுன்வருமன்பிலார்
  அணியரங்கர்நடத்துநீதியநீதியாகவிருந்ததே.

(எ-து) முன்புமாரீசனாகிய மானையம்பினாலெய்தவரிப்போ இன்னுமென்னுடைய மடமானேக்கத்தினாலே மானைபொப்பாளை யெய்திலரென்னவே எய்தப்பொருகின்றிலரென்பதாயிற்று அன்றியுஞ் சக்கராயுதத்தினாற் பொழுதைமறைத்து மாலையாகிய செவ்வந்துமாலையைத்தந்தவர்பசுமைபொருந்திய துளவமாலையைத்தந்திலர் அன்றியுந்தேவேந்திரனால்விடுப்பட்டுவந்து பொழியப்பட்ட சோனைமழையை விலக்கிவிட்டவர்சொரியப்பட்டகண்மாரியை விலக்கி விடுகின்றிலர்அன்றியுந்தேவர்களுக்கெல்லா மமிர்தத்தைக்கொடுத்தவர் செவ்வியவொளிசிறந்த தமதுதிருவாய்மலரிடத் துண்டாகியவமிர்தத்தைக் கொடுக்கிலர் அன்றியும்ஐவர்கொடியாகிய துரோபதைக்கு மாளாததுகிலையளித்தவர் இங்ஙனமென்சிறியபேதைத்தன்மை யுடையவட்குச்சரிந்துசோர்ந்த துகிலையளித்தவர்சங்கருக்கிர வச்சத்தைத்தடுத்தவர் தையலானவட்கிரவு நீட்டிக்குமச்சத்தைத்தடுக்கிலர் அன்றியுங்கெஜேந்திரனாகிய யானைக்குமுற்பட்டுவரும்படிக்கு அன்புண்டானவர்முலையாகியகொங்கைப் போரானைக்குமுற்பட்டுவரும்படிக்கன்பில்லாதவராயிருந்தார் ஆகையால்அழகிய திருவரங்கேசர் நடத்துகின்றநீதியெல்லா மநீதியாயிருந்ததென்றவாறு. (இவையெல்லா முரண்டொடையாய் முடித்தவாறறிக.) (உஎ)

எண்சீர்க்கழிநெடில்-ஆசிரியவிருத்தம்.

இருளினும்வெளியினுமருளினுந்தெருளினும்
　இன்பமேயடையினுந் துன்பமேமிடையினும்
ஒருவர்முன்புகழினுமிருவர்பின்புகழினும்
　ஊனிமங்கழியினும்யான்மறந்தொழிவனோ
சுருதிநின்றேலிடுங்காதலந்நாலொடும
　துவளுநூன்மார்பும்பவளவாய்மூரலும்
திருவரங்கேசர்தஞ்சுருள்கருங்கேசமும்
　செய்யநீண்முடியுமத்துய்யசேவடியுமே.

(எ-து) இருளாகிய போதிலும்பகலாகிய போதிலும் மாயையின் வசத்தனல் மயங்கினாலும் அப்படிமயங்காமற் றிடச்சித்தனாய்த் தெளிந்தாலும்இன்பமானதெய்தியின்புற்றாலுந் துன்பமானது துன்னித்துன்புற்றாலும் ஒருவர் முன்னின்று புகழ்ந்தாலும் அப்படிபுகழ்ந்தவர் முன்புகழ்ந்தாலும் முன்னாலமைக்க வில்வுடம்பேபிறந்தழிந்துபோனாலும் யான் மறந்தொழிந்திருக்க வல்லவனாவேனோ நான்குவேதமும் முறையிடப்பட்ட திருவரங்கேசருடைய நான்குபுயங்களையும் புரிநூலானது துவண்டேபுரளாநின்ற பொலிவினையுடைய மார்பினையுஞ்செம்பவளம்போன்ற திருவாயிற்சிறந்த முத்தினையொத்த முறுவலையுஞ்சுருண்டு இருடையுற்றசோதியான கேசத்தையுஞ் செவ்விதாகியநீண்ட திருமுடியையும்வணமையுடனே துய்யதாய்ச் சிவந்ததிருவடித்தாமரையையுமெக்காலத்துமறவேனென்றவாறு. (௨.அ)

நேரிசை-வெண்பா.

சேவடியான்முட்டிமண்டென்னரங்கத்தம்மானீ
மாவலிபால்வாங்கியநாண்மண்ணுலகோ-மூவுலகும்
வீசுங்காலோவலியவெவ்வினையேனெஞ்சமோ
பேசுங்காலேதோபெரிது.

(எ-து) தெற்குத்திசைக்குத் திருப்பதியாகிய திருவரங்கத்திலுள்ள சுவாமி அடியேன் விண்ணப்பங்கேட்டருள்வாயாகவேண்டும் தேவரீர்மாவலியினிடத்திலேவாமனவடிவாய்வந்திரந்துஉமதுசேவடியினாலே மூவடிமண்கேட்டு வாங்கினவந்நாளிலேபூமியந்தரசுவர்க்கமானமூவுலகமும் வீசிவிளங்கிய பாதமோ பெரிதானது அல்லவென்று தீவினையினுடைய சிறிவான சிந்தைதானோபெரியதானதென்றுபேசுமளவில்இம்மூவுலகும்மிருக்குமிடம் விசாலமன்றி நீண்டதிருவடியானதென் சிந்தையிலடங்கிநீங்காமல்நிறைந்திருக்கையால் என்னெஞ்சமே பெரியதென்றவாறு. ()

நாலசீரடிநாலு-கட்டளைக்கலித்துறை

பெருவரங்கேசவனல்லாதருள்செயும்பேரிலையே
ஒருவரங்கேசற்றுமோதாரென்காதலையோடியெங்கும்
கருவரங்கேசலிக்கத்திரிவோர்க்குக் கருணைசெய்யும்
திருவரங்கேசற்குநீசொல்லல்வேண்டுஞ்செழுங்குருகே.

(எ-து) எனக்குப்பெரிதாகிய வரங்கொள்கைக்குக் கேசவனல்லாதபேரில்லை என்காதலையுன்னைவிடவொருவருமவர்க்குச்சற்றாகிலுந் தெரியப்படச்சொல்வாருமில்லை ஆகையாலேவீணாகக்கருவரங்காகியகெர்ப்பக்கிரகங்கடோறும்பிறந்துமிறந்து முழலப்பட்ட திருவரங்கேசருக்கு நீயேபோய் என்னுயசமெல்லாஞ் சொல்லவேணுஞ் செழுமைபொருந்திய குருகாகியபுள்ளே யென்றவாறு. (௩௰)

இரங்கல்தாழிசை.

குருகுராங்குகானலேகருநிறங்கொள்பானலே
கொடியிருண்டஞாழலேநெடியகண்டநீழலே
பொருள்தரங்கவேலையேநிருதரங்கமாலையே
போதவின்றகம்புளேயேதையின்றியம்புகேன்
திருவரங்கரிணையிலாவொருபுயங்கவணையிலே
திகழ்வலக்கைகீழதாமுகிழ்மலர்க்கண்வளரவதோர்
கருணைகம்புவதனமுமருணவிம்பவதரமும்
காவிகொண்டமேனியுமாவிகொண்டுபோனவே.

(எ-து) குருகாகியபட்சிசாலஞ் சஞ்சரித்துறங்காநின்ற கானலாகிய கடற்கரையே கரியநிறங்கொண்ட பானலாகிய நெய்தலையேகொடியிருண்ட ஞாழலாகியதருவேநெடியதாய்நிழலை நிறைந்துநின்றதாழையே பொருதப்பட்ட தரங்கமாகிய அலைகளையுடைய சமுத்திரமே நிருதராகிய விராக்கதருடைய நிறம்போன்றமாலையாகிய அந்தியேபோதாகியபூந்தாதிகளைப்பொசிக்கப்பட்ட கம்புகளாகிய சம்பங்கோழியேஉங்களுடனே யிப்போயானெதை யென்றெடுத்துச் சொல்லப்போகிறேன் திருவரங்கருடைய விணையில்லாத வொருபுயங்கமாகிய பாம்பணையின்மேலிகழ்ந்து பிரகாசிக்கும் வலக்கையைத்திருமுடிக்கீழே கொடுக்கையணையாகக் கொடுத்துமுகளிதமாகிய மலர்க்கண்வளராநின்ற வொருபைப்பற்ற கருணை வெள்ளங் குடிகொண்ட முகாம்புயமுஞ்சிவந்த ஆதொண்டைப்பி

முத்தை யொத்தவதரமுங் காவியாகிய செருங்குவளைப்பூவை யொத்த திருமேனியுமாகிய இவ்வவையவங்கடோறு முண்டான அழகுகளெல்லாங் கூடி பெண்ணாவியாகிய பிராணனைக் கொள்ளைகொண்டு போயிற்றென்றவாறு

(௩௧)

பன்னிருசீர்க்கழிநெடில்-ஆசிரியவிருத்தம்

போனகம்பதினாலுபுவனந்திருப்பள்ளி
பொறியரவணைப்பாற்கடல்
பூமடந்தையுநிலமடந்தையுந்தேவியர்
புராதனமறைக்குமெட்டா
வானகம்பேரின்பமுடன்வீற்றிருக்குமிடம்
வாகனம்வயினதேயன்
மலர்வந்தநான்முகன்றிருமைந்தனவன்மைந்தன்
மதிமுடிவ சவன்முதல்
தேனகுங்கொடைமவுலிமுப்பத்துமுக்கோடி
தேவருனதேவல்செய்வோர்
திங்களும்பரிதியுஞ்சங்கமுந்திகிரியுந்
திசிவனருகிற்பனவுமாம்
ஏனைமன்னுயிர்முழுதும்விளையாடநீவகுத்
திட்டபலமாயைபதனால்
எழிலரங்கந்துயிலுமெம்பிரானின்பெருமை
யாவரேவாழ்த்துவாரே.

(எ-து) அழகியதிருவரங்கத்திலேசேஷசயனத்திற் றிருக்கண்வளரா நின்ற சுவாமி தேவரீருக்குப்போனகமாகிய பொசிப்பாவது பதினாலுபுவனமும அதுவுமன்றித் தேவரீருக்கழகிய பள்ளியறையாவது பொறியரவென்னும் பாம்பாகிய வணையையுடைய திருப்பாற்கடல் அதுவுமன்றித் தேவரீருக்குத்தேவிமாராகிறவர் ஸ்ரீதேவியும் பூதேவியும் அதுவுமன்றித் தேவரீருக்கு வின்பத்தோடுங்கூடிப் பரவாசுதேவர் எழுந்தருளியிருக்குமாவது புராதனமாகிய நான்குவேதத்துக்கு மெட்டாதவானுலோகம அதுவுமன்றித் தேவரீருக்குவாகனமான துவயினதேயனாகிய கருடன் அதுவுமன்றித் தேவரீருக்குவந்து யேவற்றொழில் செய்யப்பட்டவர்கள் உனது உந்திக்கமலத்திற் பிறந்தபிரமதேவனாகிய பிள்ளைக்குப் பிள்ளையாகிய பிறைமயைச் சூடினவன்தேவேந்திரன் முதலா

கிய கற்பகப்பூத் தேன்றளிக்காநின்ற பூமாலைபொருந்திய பொன்முடிந
வித்த முப்பத்துமுக்கோடிதேவர்கள் அதுவுமன்றித்தேவரீருக்கு ஆயு
தமாவது சந்திரசூரியராகிய சங்குசக்கராயுதம அதுவுமன்றித்தேவரீரு
க்குவிளையாடலாவது பலபலமாயையாக வகுக்கபபட்ட தத்துவனமும்
ஊர்வனவுந் தவழ்வனவு நிற்பனவு முதலாகியசகலசீவராசிகள் ஆகை
யால் தேவரீருடைய பெருமையையெவராலறிந்து புகழப்படுமென்ற
வாறு.
(௩௨)

(இரங்கல்-இதுவும்அது)

வாழுமெளவித்துழாய்மணமும்மகரக்குழைதோய்விழியருளும்
மலர்ந்தபவளத்திருநகையுமார்பிலணிந்தமணிச்சுடரும்
தாழுமுளரித்திருநாபித்தடத்துளடங்குமனைத்துயிரும்
சரணக்கமலத்துமைகேள்வன்சடையிற்புனலுங்காணேனால்
ஆழமுடையசருக்கடலினகடுகிழியச்சுழித்தோடி
அலைக்குங்குடகாவிரிநாப்பணைவாயாவிற்றுயிலமுதை
ஏழுபிறப்பிலடியவரையெழுதாப்பெரியபெருமானை
எழுதவரியபெருமானென்றெண்ணாதெழுதியிருந்தேனே

(எ-று) திவ்வியமங்களசுரூபமாய்ச் சிறந்த திருமுடியிற்சூடிய துளவ
மாலிகையின் சுவந்தத்தையுந் திருமகரக்குழைவிளங்கிய திருச்செவியி
ற்சென்று சேராநின்ற கடாட்சவீட்சணத்திற் பெறுங்கருணைவெள்ளத்
தையுஞ்செம்பவளம்போன்ற திருவரங்கமலராற்சிறந்தசிறுநகையையுந்
திருமார்பிலணிந்த கவுஸ்துவாபரண மிளியின் சோதியையுந்தாழ்ந்து
சுழிந்த தாமரையாகிய நாபித்தடத்துக்குள்ளாயடங்கிநின்ற சாவசீவரா
சியையுஞ் சரணாரவிந்தத்தில் உமாபதியினுடைய சடைக்கங்கையும்
நான்காணேன் ஆகையாலாழமுண்டான சருக்கடலினுடைய அகடாகி
ய வயிறுகிழியச் சுழித்துக்கொண்டோங்கி அலைக்காநின்ற குடகாவேரி
க்குநடுவே ஐந்துவாயையுடையபாம்பாகிய அணையிலேயருட்கண்வளர்
ந்தருளியமுதம்போன்றவரைத்தமக்கு அடியாரானவர்களுடைய எழு
பிறவித்தொகையையுமியமன்கணக்கி லெழுதாதபெரியபெருமானையெ
ழுதற்கரியவெழிலுடைய பெருமானென்று மெண்ணாமல் என்பேதை
யாகிய புத்தியினுலெப்படத்தி லென்னென்று துணிந்து வெழுதியிருந்
தேன்.
(௩௩)

இதுவுமது-எண்சீர்க்கழிநெடில்-ஆசிரியவிருத்தம்.

இருங்குங்குமத்தோளரங்கேசர்முன்னாள்
இலங்கா புரங்காவலன் காலினால்வீழ்

கருங்குன்றுபோன்மண்முகங்குத்திவீயுக்
கண்டாரெனக்கின்றுதண்டாணிரத்தால்
மருங்கெங்கும்வம்போதுவார்வாயடங்கும்
வாடைக்குநிலமங்கையாடைக்குநோகேன்
நெருங்குந்தனஞ்சந்தனம்பூசலாகும்
நீளாதிராமையன்மீளாதிராதே.

(எ-து) பெரியதாகிய குன்குமங்களைக்கொட்டாநின்ற தோளினையுடையவரங்கநாயகர் முற்காலத்தில் இலங்காபுரிக்குக்காவலனாகிய இராவணனைக் காலாகியசண்டமாருதத்திறை் கவர்ந்துவிழாநின்ற கருமலைபோல மண்ணிலே முகங்குத்தித் தலைகீழாய்விழும்படிக்குச்செய்தவா இப்போதெனக்குத் தணமையை யுடையமாலையைத்தந்தாராகில் இவ்விடத்திலெங்கெங்கு மலர் தூற்றுவாருடைய வாமலராகாமலடங்கும் அதுவன்றியும் வாடையாகிய காற்றுகருமநிலமங்கையாகிய கடலுக்கும் யான் நோக்கத்தக்கதில்லைஇழையுந்தழையப்படாதநெருக்குதலையுடையதனத்திலே நற்சந்தனக்குழம்பைத்தடவலாகும் இரவும்நீட்டியதென்னுசைநோயும் நீங்குமென்றவாறு. (௩௪)

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருக்கம்]

தேடுகின்றனையைம்பொறிகளுக்கினைதேடியுங்கிடையாமல்
வாடுகின்றனைவீடுசென்றென்றினிமருவுவைமடநெஞ்சே
ஆடுகின்றிலையழுகிலைதொழுகிலையரங்கனைக்காங்கூப்பிப்
பாடுகின்றிலைநினைகிலைபதின்மர்தம்பாடலின்படியாயே.

(எ-து) அல்லும்பகலும் அவமேதிரிந்தைம்பொறியாகிய மெய்வாய்கண-மூக்குச்-செவியென்பதற்குச்-சத்த-பரிச ரூப-ரச-கந்தமாகிய பொசிப்புகளைத்தேடாநின்றாய் அப்படித்தேடியுங்கிடையாமையாய் வாடாநின்றாயாகில் நமக்குமோக்ஷமாகிய வீட்டினிடத்திலே இனியென்றைக்குச்சேரப்போறாய் மடமையை யுடையநெஞ்சமே அரங்கநாயகனை இரணடுகைகளையுங் குவித்துப் பாடுகிறாயில்லை ஆனந்தமாக நின்றாடுகிறாயில்லைதிருவடிகளிற்றொண்டனாகி விழுகிறாயில்லைநினைந்து நினைந்துபரவசமாகிறாயில்லைபதின்மராகிய ஆழ்வாராதியர்பாடினபாடலையும்படிக்கிறாயில்லை எ-று. (௩௫)

[எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

ஆவினைமனையைச்சேயினைப்பிதாவை
அனத்தினைத்தனத்தினைவிரும்பும்

பேயினைமறந்துநோயினைமூப்பைப்
பிறப்பினையிறப்பினைத்துடைப்பீர்
ஆயனைமுளரிவாயனையெங்கள்
அமலனைக்கமலனைப்பயந்த
தாயனைநெடியமாயனைவடபாற்
றரங்கனையரங்கனைத்தொழுமே.

(எ-து) மாதாபிதாவையும்-பெண்டீர்பிள்ளையும்-அன்னத்தையும்சொர்னத்தையும்-மற்றுமுள்ள பண்டபதார்த்தங்களையும்-பொய்யென்றறியாமல்-மெய்யென்றுவிரும்பும் பேயாகியபித்தை மறந்து-நோயையும மூப்பையும் - பிறப்பையு மிறப்பையுந் துடைத்து அடியினைக்கருதுவீர்கள்-எப்படி யென்றாலாயனாகிய கோபாலனைமலர்ந்த செந்தாமரையை யொத்த வாயையுடையவனை எங்கள் மும்மலத்தையு மொழிக்கப் பட்ட வமலனான வனைக்கமலனாகிய பிரமதேவனைப் பெற்றதாயானவனை நெடிதாகியமாயனைவடபத்திரத்திலும் பாற்கடலிலும் பள்ளிகொண்டவனைய ரங்கநாயகனையடைந்துதொழுதுகொள்ளுங்களென்றவாறு. (௩௬)

[மடக்குக்கட்டளை மண்டலக்கலிப்பா]

தொழப்பெறுதந்தவாரணத்தந்தமே
தொட்டிறுத்ததும்வாரணத்தந்தமே
வழுத்துதாண்முன்புவனங்கடந்ததே
மலர்ந்தவுந்திபுவனங்கடந்ததே
ஒழித்ததுங்குழைச்சங்கரன்சாபமே
ஒசித்ததுங்குழைச்சங்கரன்சாபமே
அழித்ததும்பொருகானவரங்கமே
அரிதனூரினிதானவரங்கமே.

(எ-து) அரங்கேசருடைய பெருமையை இத்தன்மைத்தென்றறிந்து தொழமாட்டாததுவும் அழகிய வேதாந்தமேஅவர் தன்கையினாலேதொட்டுமுறித்ததுவும் யானைக் கொம்பையே யவர்முன்பு சீதைப்பிராட்டியாருடனே வனங்களைக்கடந்து சென்றதுவும் தொண்டர்களா யுள்ளோர்யாருந்துதிக்க திருவடியேஅதுவுமன்றி இப்புவனங்களை யெல்லாம்பெற்றதுவும் அவருடையமலர்ந்த நாபிக்கமலமே அதுவுமன்றி யொருவராலுமொழிக்கற்கரியதை அவரொழித்ததுவுந் துயரமுற்ற சங்கரனுடையசாபத்தையேமற்றும் யாவராலும வளைக்கப்படாதத்தை யவர்வளைத் தொடித்தது குழையாகச் சங்கைத்தரித்த அரனுடைய வில்லையே

மற்றுமவனழிக்கிறதும் பொருதப்பட்ட அசுராதிகளுடைய அங்கத்தை யேஅவனுக்கிருப்பிடமாகத் தேவலோகத்திலு மினிதானது அரங்கமா நகரமே யென்றவாறு. (கூஎ)

நேரிசைஆசிரியப்பா உயிர்வருக்கைமோனைகாண்க.

அரங்கமாளிகைக்கருங்கடல்வண்ணனை
ஆலிமாமுகிலை வாலிகாலனை
இந்தளூருறை யெந்தைபெம்மானை
ஈசனான்முகன் வாசவன்றலைவனை
உள்ளுவாருள்ளந் துள்ளுறைசோதியை
ஊரகநின்றரு ளீரகத்தடிகளை
எவ்வுண்மாயனைத் தெய்வநாயகனை
ஏர்மலிசிகரத்து நீர்மலையாதியை
ஐவாயரவி லறிதுயிலமலனை
ஒருகான்மொழியினுமொழிகுவைநெஞ்சே
ஓதநீர்ஞாலத் துழலும்
ஔவியபிறப்பி லழுந்திவாடுவதே.

(எ-து.) அரங்கமாகிய மாளிகையினிடத்தில் வாழுங்கரிய கடலையொத்த திருமேனியின் வண்ணத்தையுடையவனை யாலினிடத்திலே மாவாகிய மகாலட்சுமிக்கும் முதன்மையானவனை-வாலிக்குவலியகாலனான வனைத் திருவிந்தளூரிலுறையப்பட்ட வெந்தையாகியசுவாமியை ஈசனென்று ம், நான்முகனென்றும், வாசவனென்றுஞ் சொல்லப்பட்ட இவர்களுக் குத்தலைவனானவனை ஓயாமல்நினைப்போர்களுடைய நெஞ்சகத்துள்ளே நிறைந்தஜோதியானவனை திருவூரகத்திலேநின்றருளிய திரிலோகத்தடி களாகிய தேவனைத்திருவெவ்வுளூரில வீரராகவனென்னுமாயவனை திரு வயிந்திரபுரத்திற்றெய்வ நாயகனானவனை அழகின்மிகுந்த சிகரங்களையு டைய நீர்மலையினிடத்திலெனக்கெந்தையாயிருக்கப்பட்டவனை ஐந்துத லையையுடைய ராவணையிலறிதுயிலாக வமர்ந்தருளிய அமலனானவனை நெஞ்சமே ஒருகால் அவனது துதியை சொன்னாயாகிலு மொழித்து விடலாம் கடல்சூழ்ந்தவுலகத்திலே யுலாவிநின்றுழலு மௌவியமென் னும்பொய்மையாகிய பிறவி சாகரத்திலழுந்தி வரப்பட்ட அனுபவமெல் லா மென்றவாறு. (கூஅ)

## இரங்கல்-தாழிசை.

வாடியோடவனமன்னவிருகண்வெள்ளமருவிபோல்
மருவியோடமதனன்வாளியுருவியோடவாடையூ
டாடியோடவன்றிலோசைசெவியிலோடவண்டுழாய்
ஆசையோடுமெங்கள்பேதையாவியோடனிதியோ
மோடியோடவங்கிவெப்புமங்கியோடவைங்கரன்
முடுகியோடமுருகனோடமுக்கணீசன்மக்களைத்
தேடியோடவாணனாயிரம்புயங்கள்குருதிநீர்
சிந்தியோடநேமிதொட்டதிருவரங்கராஜனே.

(எ-து) மோடியாகிய மூதணங்கு கோற்றோடவும், அங்கியாகியநெருப்பினுடையவெப்பமுமங்கியோடவும், ஐந்துகரமுடைய யானைமுகவன் முடுகியோடவும், அவன்தம்பியாகிய முருகனைவன்பிரைபு கடுகியோடவும், மூன்றுகண்ணினையுடைய ஈசனைவன் மக்களைத் தேடியோடவும் வாணாசுரனுடையஆயிரம்புயங்களினுமிருந்துகுருதிநீர்வெள்ளமானது குதித்தோடவும், சக்கராயுதத்தைவிடுத்தருளியதிருவரங்கராஜனே எங்கள்பேதைத்தன்மையையுடையவளுடைய கமலம்போன்றவிருகண் மலருடவும், வாடையானதுவந்திழைந்தோடவும், அன்றிலாகியபட்சியினோசையினால்இருசெவியிலும் நுழைந்தோடவும், வண்மையுடைய உமது துளபமாலைமேல்வைத்த ஆசையுடனேகூட அவளாவி கூட்டிவிராதநீங்கியோடவும்நீதியோ சொல்லுமென்றவாறு.

(ஈ-கூ)

## கலிச்சந்தவிருத்தம்.

சருகருந்தினையம் பொறிவருந்தருந்
தவர்களண்டர்குஞ் சரமுகன்முகன்
பரிதிசந்திரன் சிவனயன்புரந்
தரணிரந்தரம் பரவுமெந்தையூர்
குருகைநஞ்சைதென் கணபுரங்குறுங்
குடிகுடந்தைவண் டுவரையிந்தளூர்
திருவைகுந்தமஞ் சனசிலம்பயிந்
திருபுரஞ்செழுந் திருவரங்கமே.

(எ-து) சருகுமுதலாகிய பொசிப்புகளைப் பொசித்து வைந்து பொறிகளும் வருந்தப்பட்ட அரியதபோதனர்கள் - தேவர்கள்

ஆனைமுகவன்-ஆறுமுகவன்-சந்திரன்-சூரியன்-சிவன்-அயன்-தேவேந்திரன் முதலானபேர்கள் சதாகாலமும்பரவிப் பணியுமெந்தையாகிய எம்பெருமானுக்கு யிருப்பிடமாகிய வூராவது திருக்குருகை-திருக்கஞ்சை-திருக்கண்ணபுரம்-திருக்குறுங்குடி,திருக்குடந்தை- திருத்துவரை திருவிந்தளூர்-திருவைக்குந்தம்-திருநீலகிரி-திருவயிந்திரபுரம்- செழிப்பினையுடைய'திருவரங்கமுதலானமற்றுமுள்ளதலங்களுமாமென்றவாறு.

மடக்குக்கொச்சகக்கலிப்பா.

திருவரங்கர்திருக்கோயில்சேர்ந்துமதுதிருக்கோயில்
தருவரென்றும்வைகுந்தந்தயக்கொளிசேர்வைகுந்தம்
ஒருமருங்கினந்துடையாரொழிந்தோர்சனனந்துடையார்
மருவமறந்திருப்பீரேவணங்கமருந்திருப்பீரே.

(எ-று) திருவரங்கமாகிய வழகியகோயிலைச்சென்று சேர்ந்து உங்கள் இருக்காகிய தீவினைகளெல்லாந்தீர்ந்துதேயானால் தருவர் எக்காலமுந் தாமிருந்தருளியதம்முடையவொளிரு மொளிசேர்ந்தவைகுந்தத்திலிருக்கும்பதவியையொருவருமருங்காடிய இடதுகையிலேந்தியசங்கத்தைக யுடையவரேயன்றி மற்றொருவருங்கள்செனனத்தைப் போக்கமாட்டார்கள் ஆகையாலவருடைய திருவடித்தாமரையை மருவுதற்குப்பொருந்தாமற் போகப்பட்ட மாறுபாடாகியவுங்கள் மனதைத்திருப்புங்கள் வணங்குகிறதுக்கு மறந்திருக்கப்பட்டவர்களேயென்றவாறு (௪௧)

சித்துகட்டளைக்கலிப்பா.

திருப்பொற்பாவைக்குக்கஞ்சம்பொன்னாக்கிய
சித்தரேஞ்சுத்தக்காயாமலரென
உருப்பொற்பான்திருவரங்கோனூர்
வரகத்துநின்றூர்சென்றிறைஞ்சினேம்
இருப்புப்பாடகங்காட்டினர்யாமவர்
இருப்பையாளகமாக்கினமீயத்தை
நருக்கிவெள்ளியதாகவுருக்குவோம்
நமதுவித்தைதக்கமுதேயருமையே.

(எ-று) திருப்பொற்பாவையாகிய சீதேவிக்குக் கஞ்சமாகியவெண்கலத்தைப்பொன்னாக்கியசித்தர் நாம் மைந்திருண்டகாயாம் பூவையொத்த

வடிவழகிய திருவரங்கேசனவர் திருவூரகமாகிய வீட்டிலிருக்கும் போதுசென்றிறைஞ்சினோம் அப்போதவரிருப்புப்பாடகங்கட்டினர் நாமவருக்கு அந்தவிரும்பை யாடகமாகியபொன்னாகச் செய்தோம் அதுவன்றியீயத்தை நீறாக்கி வெள்ளியதாகவுருக்குவோம் இதுவெல்லாமருமை யல்லவெமதுவித்தைக்கு அமுகமாத்திரமே யருமை யென்றவாறு. (இன்னவிதற்கையுரையிற் பொருளறியமிகனுள்ளாரையென்றேவென்னிற்சித்தசிவிருப்பதுபொற்றுமையாதலால் கஞ்சமாகியதாமரையைப்பொன்னாக்கினோமென்றார் இருப்புப்பாடகங்காட்டினரென்பதுதாமிருக்குமிருப்பிடங்கிருப்பாடகமாகியதலமென்றறிவித்தது இரும்பைபாடகமாக்கின மென்பது பெரியபாம்பின்படத்தை யெவருக்குநாடகசாலையாக்கினமென்றது ஈயத்தைநீறாக்கி வெள்ளியதாக வுருக்குவோமென்பது ஈயத்தை யுருக்கிநீறும்போது வெள்ளியதாயோமென்பது கருத்து) (௪௨)

இதுவமது-கட்டளைக்கலித்துறை-

அரும்பித்தளையவிழ்நாண்மாலைமார்பனரங்கனெங்கள்
பெரும்பித்தளையும்பிறப்பறுத்தாண்டபிரான்சித்தரேம்
கரும்பித்தளையுந்தராவும்பொன்னாக்கித்தருவெமப்பர்
திரும்பித்தளையிலுநெய்பாலமுதிலுஞ்சிந்தனையே.

(எ-து) அரும்பான தரும்பிமுறுக்கவிழ்ந்துபுஷ்பிக்கும் பூமாலையையணிந்த மார்பையுடையர் அரங்கமாகியநகரையுடைய பெரிதாகியபித்தையளைந்து குழப்பும்பிறப்பை யொழித்தாண்டருளியபிரானை அசங்கநாயகருடைய திருவடிச்சரிதாகியசித்தர்நாம் நீங்கள் தரப்பட்டபித்தளையையுந் தராவையும் பொன்னாக்கித்தருவோம் அப்பாலெஞ்சிந்தையானதிப்போதிரும்பிற்று வெண்ணெயிலேயும் நெய்யிலேயும் பாலிலேயும் விருப்பமாய்ப் போசிக்கவேண்டுமென்றவாறு (இதற்குயின்னமுமொன்றுண்டு கரும்பித்தளையுந்தராவும் பொன்னாக்கியென்பது தரும்பிமதித்து அணைந்தவளையின்முட்டும் அராபாம்புக்கு அரியென்றபேர்பொன்னுக்கு மரியென்றபேராகையா லப்பொன்னைப்பொன்னாக்குகின்றனென்றுரென்றவாறு- (௪௩)

நேரிசைவெண்பா.

சிந்திக்கத்தித்திக்குஞ்செவ்வாய்துவர்த்துப்பாம்
புந்திக்குள்ளேயின்புளிமேவும் நந்தம்

கருவரங்கனைத் தழலுங்காவிரியினூடே

திருவரங்கத்தேவளருந்தேன்.

(எ-து) காவேரியினிடத்திலே திருவரங்கத்திற் கண்வளரா நின்றின்பத்தைச்செய்கின்றமையால் தேனைப்போலிருக்கின்ற அரங்கநாயகராகிய தேனையுண்ணவெண்ணுகின்ற சிந்தையினாற் சித்திகுமாரத்திலேதானே பிறவுஞ்சமாகிய வாழ்க்கையில மற்றொரு பொசிப்பினை விரும்புகின்ற சிவந்தவாயனது அவர்த்தும்பாய்விடும் இடையத்திலேயேயிடைவிடாத ஆனந்தமாகியபேரின்பமுடைக்காவிருக்குமனைவியும் நம்முடைய திருவரங்கமாகிய கருப்பைக் கைத்துக்கனற்று நீற்றுமென்றவாறு. (௪௪)

கட்டளைக்கலித்துறை.

தேனந்துசோலையரங்கேசர்சேவடிமேல்விசயன்
தானந்தநாளேயிற்சாத்தியமாலையுந்தாள்விளக்கும்
வானந்தருங்கங்கைநன்னீருஞ்சென்னியில்வைக்கப்பெற்ற
வானந்தந்தானல்லவோமுக்கணன்மன்றுளாடிவதே

(எ-து) வண்டினங்கள்காவாநின்ற பூங்காவனஞ்சூழ்ந்த அரங்கநாயகருடையதிருவடியில் அர்ச்சுனனானவன் முற்காலத்திலர்ச்சித்த மாலையும் அடியிணைவிளக்கிய வரனிடத்திலே பெருங்கங்கையாகியநன்னீருமைந்திரசிலே வைக்கப்பெற்ற ஆனந்தமாகிய மகிழ்ச்சியினாலன்றோ மூன்றுகண்ணினையுடையவன் மன்றினிடத்திலேநடனமாடினதென்றவாறு,

இரங்கல்எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

ஆடும்படநாகணைமேலணையு
மமலன்கமலத்தவனுஞ்சிவனும்
நாடுந்திருமாறுயில்கோயிலின்வாய்
நறைவார்பொழிலூடுலாவராளகக்
காடுங்குழையைச்சாடுங்குவளைக்
கண்ணுங்குதலைப்பணனுங்கரியின்
கோடுந்தாளத்தோடும்புருவக்
கோதண்டமுமேமழுதண்டமுமே.

(எ-று) எண்டிக்காடும்படத்தினையுடைய பாம்பணையிற்பள்ளிகொள்ளும் பரமபுருஷோத்தமரானவருந்திக் கமலத் துதிக்கவயனும் அரனுமார் புக்கறிதற்கரிய திருமாலானவர் திருக்கண்வளருந்திருவரங்கத்தினிடத்திலே நறுநாற்றங்கமழும் நந்தவனத்திலேநன்னுதலியாருடைய அளகாடவியுங்காதிலணிந்த குழையுமந்தலைக்குங்குவளைமலரை யொத்தகண்ணுங்குக்கிளையாகியபண்ணின்மொழியுமானைக் கொம்பை யொத்தமுகிழ்கொங்கையுமுக்கிணுமேலேயமைத்ததோடும் புருவமாகியவில்லுமாகவே தோன்றுகின்றதுமூதண்டகோளமுழுதும்-என்று. (௪௬)

கைக்கிளை. எழுசீர்க்கழிநெடில் ஆசிரியச்சந்தவிருத்தம்.

அண்டமுழுதுண்டவருமிழ்ந்தவரிடந்தவ
ரளந்தவர்வளர்ந்தருளுமா
சண்டபணவைந்தலையனந்தசயனந்திகழ்
தருந்திருவரங்கர்வரைமேல்
கண்டதொருகும்பத்திரண்டுமகரங்களொரு
கஞ்சமிருமெஞ்சிலைமணம்
கொண்டதொருகொண்டலிருகெண்டையொரு
தொண்டையிருகும்பமொருசெம்பணிலமே.

(எ-து) அண்டபகிரண்டங்களெல்லாம்போனகமாகவுண்டுமிழ்ந்துமிடந்துமளந்தவர் அதுவன்றியும் நீண்டுவளரும்பெரியசொடிதாகிய கடங்களைப் பொருந்தியவைந்தலையையுடையவனந்தசயனத்திலே திகழ்ந்தருளிய திருவரங்கேசருடைய வரையினிடத்திலேஎன்கண்ணினுற்காணத்தக்கவிளங்கிக்கொம்பொன்றுண்டு அதிலேயிரண்டு மகரங்களுமொருதாமரையுமிரண்டுவில்லும்மணம்பொருந்தியவொருமேகமும் இரண்டுசேர்க்கண்டையுமொருஆதொண்டைப்பழமும் இரண்டுகுடமும் ஒருசங்குமுள்ளதென்றவாறு (இன்னங்கேளென்னில் இளவஞ்சிக் கொம்பிடையாகவும்-மகரக்குழைகாதாகவும்-தாமரைமுகமாகவும்-வில் - புருவமாகவும்-அளகமாகவும்மீனம்விழியாகவும்-ஆதொண்டைப்பழம்வாயாகவும்-குடங்கொங்கையாகவும்- சங்கங்கழுத்தாகவும் கொண்டு தலைவன்தலைவியை வியந்துரைத்தது.) (௪௭)

இரங்கல்-தாழிசை.

செம்பொன்னரங்கத்தரங்கநீர் சீதளசந்திரவாவிசூழ்
கம்புளுடன்பயிலுமைகாள்காதலையென்சொலியாதேயென்

வெம்பனிவந்ததுவந்தபின்வேனிலும் வந்ததுவேனில்போய்ப்
பைம்புயல்வந்ததுசென்றனம் பாதகர்வந்திலர்காணுமே

(ஏ-து) செம்பொன்னினாற்செய்தவரங்கத்தினிடத்திலேயலைகள்பொருந்திய நீரளாவியசீதளசந்திர வாவியாகிய சந்திரபுஷ்கரணியைச் சூழப்பட்டகம்புளாகியசம்பங்கோழியுடனேகூடத் துயிலாநின்றநாரைகளே யான்கொண்டகாதலையென்னென்றுசொல்லி யாற்றிக்கொள்ளப்போமே ன்வெவ்விதாகிய பனிக்காலமும்வந்தது இரக்கமின்றி நம்மை விட்டுப்பிரிந்து போனபாதகரின்னம்வந்திலர்காணுமெனறவாறு. (சஅ)

சம்பிரதம்-பன்னிருசீர்க்கழிநெடில்ஆசிரிய விருத்தம்.

காணுகபுதுமைபலகாட்டுவென்கட்செவிக
ளெட்டையுமெடுத்தாட்டுவேன
கடல்பெருகுவென்பெரியகனகவரையைச்சிறிய
கடுகினிலடைத்துவைப்பேன்
வீணாவாரமுதண்டமுறவிளைவிப்ப
னிரவு பகன்மாறுடுவேன்
விணையுமறைப்பனெழுறணையுமெடுப்பனிவை
விளையாடும்வித்தைய்யென்றால்
நீணாகணைபள்ளியிற்றிருவரங்கத்து
நெடிதூழிதுயிலும்பிரான்
நெற்றிக்கணனவனைநான்முகனைவாசவனை
நிமிருமிருசுடரைமுகலாச்
சேணுடர்யாவரையுமடிமைகொண்டவரவர்
சிரத்திற்பொரித்துவிட்ட
திருச்சக்காப்பொறியிலாதவொருகடவுளைத்
தேடியினிமுன்விடுவனே.

(எ-து) காணப்படாத வதிசயங்களையெல்லாம் காட்டுவேன்அட்டமாநாகங்களையு மெடுத்தாட்டுவேன் சத்தசாகரங்களையும் பானம்பண்ணுவென்பெரிதாகிய மகமேருகிரியைச்சிறிதாகிய கடுகிலேயடைத்துவைப்பேன் வீணாவாரமாக அண்டகோளங்களிலுமுண்டாக்குவேன் இரவுபகலாகவும் பகலிரவாகவுமாறுடுவேன் ஆகாயத்தைமறைப்பேன்ஏழு

லகங்களேயுமெடுப்பேன் இதுவெல்லாம் விளேயாடும்வித்தையல்ல நீண்டகாகணையிற்றிருவரங்கத்திலே நெடிதான ஊழிகாலமுமறிதுயிலமர்ந்தவெமபெருமானுனவர் நெற்றியிலேகண்ணுண்டானதிரிநேத்திரனேத்தேவேந்திரனேச்சதுமுகம்பிர்மாவைச் சந்திரசூரியர் முதலானவிண்ணுலகிலுள்ளவர்கள்யாவரையும் அடிமைக்கொண்டு அவரவர்சிரங்களிலே யெழுதிவிட்ட அழகிய சக்கரப்பொறியில்லாதவராயிருக்கப்பட்ட ஒருகடவுளேத்தேடிக்கொண்டுவந்து இனிமுன்னே விடுவேனென்றவாறு (என்னவேசக்கரப்பொறியில்லாதகடவுளெவ்வுலகினுமில்லேயாதலாற் றேடியினி முன்விடுவேனென்றருமையறிவித்ததெனக்கொள்க.) (சகூ)

எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

முன்னமேழ்புரவியானிரவிகாய்வெயிலினுல்
முத்தரும்பியகலாமுழுமதித்திருமுகத்
தன்னமேயின்னமோர்காவதம்போதுமேய்
அகலுமிப்பாலேயப்பாலரைக்காவதம்
என்னேயாளுடையவன்றுயிலராவமளியும்
இலகுபொற்கோயிலுமிந்துவின்பொய்கையும்
புன்னேவாய்நிழலும்புரிசையும்மதுகரம்
பூவிரிந்துறையுமக்காவிரித்துறையுமே.

(எ-து) முன்னமேழுகுதிரைகட்டப்பட்ட இரதமுடையவிரவியாலெரிக்கப்பட்ட வெய்யிலினலே வேர்வையாகிய முத்தரும்பிய பூரணசந்திரோதயம்போன்ற அழகியமுகத்தினையுடைய அன்னத்தை யொத்தநடையினையுடையவளேஇப்போது நாமிங்ஙனமநின்றுநடந்து போகுதற்குமுன்னம்இன்னம் ஒருகாதவழிநடந்தளவில் அங்ஙனமமூற்று நின்றபாலேவனமுண்டு அங்கபாலேவனத்துக்கு மப்பால்அரைக்காவதமுண்டு அடடத்திலேயென்னேயாளாக வுடையவருட்கண்வளராநின்றவனந்தருடியவமளியும் விளங்கப்பட்ட அழகின்மிக்கதிருவரங்கமும சந்திரபுஷ்கரணியும் புன்னுகவிருட்சநிழலுஞ் சத்தப்பிரகாரமும் வண்டுகள்படியப்பட்ட புஷபங்களமாராநின்ற பூங்காவனமும் அழகியகாவேரிதீர்த்தமும் காணக்கடவோம்அவ்வளவு நீமனந்தளராமல் வரவேணடுமென்றவாறு.

கட்டளைக்கலித்துறை.

துறைமதியாமலிக்கான்யாறுநீந்திச்சுரங்கடத்தல்
நிறைமதியாளர்க்கொழுக்கமன்றுநெடுமாலரங்கத்
திறைமதியாவருமாராவமிர்தன்னவிந்துநுதற்
குறைமதியாள்பொருட்டாற்கங்குல்வாரலெங்கொற்றவனே

(எ-து) இதுவழங்குந்துறை-இதுவழங்காத் துறையென்றுமதியாமற் பெரியகான்யாற்றை நீந்தி யரியவழியைக் கடக்கின்றமை-யுன்னைப்போலநிறைந்தவறிவுடைமையாளர்க்கொழுக்கமுடைமையன்று-நெடுமாலாகியதிருவரங்கத்திறைவனாயிருப்பட்ட எம்பெருமானுனவர்முன்னேசமுத்திரந்தானம்பண்ணவந்துநிறைந்த வமுதத்தையொத்தஇந்தக்குறைமதியாகிய பிறையையொத்த நெற்றியையுடையவள்பொருட்டாயிவ்விருளின்கண் வாராதொழிவாயாகவெம்முடையதலைவனேயென்றவாறு.

மறம்-எண்சீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

கொற்றவன்றன்றிருமுகத்தைக்கொணர்ந்ததூதா
குறையுடலுக்கோமறவர்கொம்பைக்கேட்டாய்
அற்றவர்சேர்திருவரங்கம்பெருமாடோழன்
அவதரித்ததிருக்குலமென்றறியாய்போலும்
மற்றதுதான்றிருமுகமேயானலந்த
வாய்செவிகண்மூக்கெங்கேமன்னர்மன்னன்
பெற்றவளவரசரானுலாலின்கொம்பைப்
பிறந்தகுலத்துக்கேற்கம்பேசுவாயே.

(எ-து) கொற்றவனாகிய வேந்தனுடைய திருமுகத்தைக்கொண்டு வந்ததூதனே இந்தச்சிரமிழந்தமுண்டமாகியவனைநதனித்துக்கிடந்த குறையுடலுக்கோ மறவராகிய வேடர்பெற்றவஞ்சிக்கொம்பையொத்த எங்கள்பெண்ணைக்கேட்டாய் ஆசாபாசங்களையுந்தவறியதபோதனர்களனுகப்பட்ட திருவரங்கப்பெருமாள்தோழனான குகனெனவேடன் திருவவதாரஞ்செய்ததிருக்குலமென்றறிந்ததில்லையோநீ கொண்டுவந்ததுதிருமுகமேயானால் மற்றுமிதனுடையவுறுப்பாகிய மெய்-வாய்-கண்-மூக்குச்-செவியானதெங்கே-போய்விட்டது மன்னர் மன்னவனானவன் பிற

ந்தகுலமரசனுலதற்கினமாகிய ஆலின்கொம்பைப்பிறந்தகுலத்துக்கியற்கையாகப் பேசிப்பெணகேட்பாயென்றவாறு. (ருஉ)

இதுவும்அது-எழுசீர்க்கழிநெடில்ஆசிரியவிருத்தம்.

பேசவந்ததூதசெல்லெரித்தவோலைசெல்லுமோ
பெருவரங்களருளரங்கர்பின்னைகேள்வர்தாளிலே
பாசம்வைத்தமறவர்பெண்ணைநேசம்வைத்துமுன்னமே
பட்டர்மன்னர்பட்டதெங்கள்பதிபுகுந்துபாரடா
வாசலுக்கிடும்படல்கவித்துவந்தகவிகைமா
மகுடகோடிதினையளக்கவைத்தகாலுநாழியும்
வீசுசாரமாங்குடிற்செருகுத்தகற்றைசுற்றிலும்
வேலியிட்டதவர்களிட்டவில்லும்வாளும்வேலுமே.-

(எ-து) பெண்பேசுதற்குவந்ததூதனே-கேழ்ப்பாயாகச் சரையானரித்தபணஞ்செருகுசெல்லுமோ பெரியவரங்களை அடியார்களுக்களிக்கவல்ல-அரங்கநாயகராகிய இலக்குமிகாந்தருடைய திருவடிகளிலே யாதரவான மறவர்பெற்ற பெண்ணைவேண்டி நேசம்வைப்பதற்கு முன்னமேபட்ட வர்த்தனராகிய இராசாதிராசாக்கள் பட்டபாடுகளை-எங்கள்பதியிலே புகுந்துபாரடா எங்கள்வாசலுக்குமூடும்படல்களாக அவர்கவித்துவந்த குடைகளைச்செய்தோம் அதுவுமன்று-எங்களுக்குத் தினையளக்கமாக்காலும் நாழியுமாகவவர்க ளணியப்பட்ட பெருமைபெற்ற கிரீடங்களைச்செய்தோம்-அதுவுமன்றி யெங்கள்குடி சைக்குவிழற்கற்றையாகவவர்களுக்கு வீசிவந்தவெணசாமரைகளைச்செய்தோம் அதுவுமன்றி யெங்கள்தோட்டத்துக்குச் சுற்றிலும்வேலியாக அவர்கள்தொடுக்கப்பட்டவில்லும்-வாளும் வேலும் மற்றுமுள்ள ஆயுதங்களைச்செய்தோமென்றவாறு. (ருங)

மடக்கு-நேரிசைவெண்பா.

வேலையுலகிற்பிறக்கும் வேலையொழிந்தோமில்லை
மாலையரங்கேசனைநாமாலையினுக்-காலையினும்
உன்னினோந்தோமில்லையுடலெடுத்தவன்றுமுதல்
என்னினைந்தோநெஞ்சேயிருந்து.

(எ-து) வாராய்மனமே-வேலையாகிய சமுத்திரஞ்சூழ்ந்த பூலோகத்திலே இறத்தலும் பிறத்தலுமாகிய வேலையையொழிந்த நாமல்லர்

மாலான அரங்கநாயகனைக்காலையும்மாலையும் கருதிக்கருத்துருகி நைந்த நாமுமல்ல, ஆகலாலிந்தச்செனனமெடுத்தநாள் முதலென்னகருமத்தைக்குறித்திருந்தோம்-எ-று. (௫௪)

மடக்கு கலிநிலைத்துறை.

இரும்புவனம்விரும்புவலமணியரங்கர்பணியரங்க
நிமயநணப
வருங்கொடியின் மருங்கொடியின் மனங்குழைக்குங் கனக்குழைக்கு-மனங்கன்சாபக்
கரும்புவருமபொருப்புவருமுத்தநகையொத்தநகை
காந்தள்பூர்தேன்
மருக்குழலுங்கருங்குழலுமுருகுவலையிருகுவளை
மழைக்கண்டாமே.

(எ-து) பெரிதாகிய புவனமுழுதும் போனகமாகவிரும்பியதுளபமாலையணிந்தவரங்கநாயகர் - பாம்பைபத்தானே பள்ளிகொள்ளு மிடமாகக்கொண்டவருடைய இமையமாகியவரையினிடத்திற்பாங்கனேவரா நின்றபூங்கொடியையொத்தவளுடைய யிடையானதுவொன்றுமேயென்னுடையவொழிவில்லாதமனதைக்குழைக்குமாகில்மற்றுங்கனத்த குழையையுடையாளுக்குள்ள அவையவமான காமனுடையவில்லாகியகரும்பின்தருவையொத்தப் பொருக்கப்பட்ட புருவமும்முத்தினதொளியையொத்தமூரலுங் காந்தட்பூவின் மொய்க்கும்வண்டினங்கள் படக்கத்தேயமுலாநின்ற கரியகூந்தலும் நறுநாற்றம்வனைந்த இரண்டுகுவளையுங் குவளைமலரையொத்தகுளிர்ச்சியையுடையகண்ணுமானவித்தனையும்வேண்டுமோவென்றுறலையழிக்கவிடையொன்றுமமையுமென்றவாறு. (௫௫)

பதினான்கு சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்
இதனுள்-கேசாதிபாதவரை-௩௨-அவயவங்களும்
அவற்றின் உவமானங்களோடுகொணக.

மழைபிறைசிலைவேல்வள்ளையெள்ளிலவின்
மலர்முல்லைமதிவளைகழையாழ்
வாரிசக்கெளிறுதத்தைவாய்கலசம்
மணிவடபவதிரமெறும்பூர்

அழகுநீர்த்தரங்கந்துடிசுழிபாவம்
அரம்பைஞெண் டிளவராலாமை
அணிதராசினைகந்துகந்துகிர்தாளம்
அம்புயமரங்கநாடணையார்
குழைநுதல்புருவம்விலோசனங்காது
நாசிவாய்நகைமுகங்கண்டங்
குலவுதோண் முன்கையங்கைமெல்விரல்கள்
கூருகிர்கொங்கைக்கண்வயிறு
விழைதருமுரோமம்வரையிடையுந்தி
விரும்புமல்குல்தொடைமுழந்தாள்
மிளிர்கணைக்கால்கள்புறவடிபரடு
மேன்குதிவிரனகந்தாளே

(எ-து) அரங்கமாகியநாட்டின்தொழிலையொத்த மங்கை மாரினுடையஅவயவங்களாகிய அளகமும் நெற்றியும் புருவமும் கண்ணும் காதும்நாசியும்வாயும் நகையும்முகமும் கழுத்தும்குலவப்பட்டதோளும் முன்கையும் உள்ளங்கையும்மெல்லியவிரல்களும்கூரிய நகங்களும் கொங்கைகளும்வயிறும் விழைபப்பட்டரோமவொழுங்கும வயிற்றின் வரையும்இடையுமுந்தியும்விரும்பப்பட்டஅல்குலுந்தொடையு முழந்தாளுமிளிராநின்றகணைக்காலும் புறங்காலும்பரடும் மேன்மையாகியகுதிக்காலும்விரலும்நகமுமஉள்ளங்காலுமாகிய இவ்வவயவங்களெல்லாம எவையெவைக்கொக்குமெனில்முகிலையும்பிறையையும் யாழையும் தாமரையையும்களிறுகியமீனையும்கிள்ளைவாயையும் கலசங்களையும்மணியையுஞ்செறிந்தஆலிலையையும்எறும்பூர்தலினொழுங்கையும் அழகிய நீர்த்தரங்கத்தையும்துடியையும்பாம்பையும்கதலியையும்ஞெண்டையும் இளவராலினையும் ஆமையையும் அழகியதாரசினையும் பந்தையும் பவழத்தையும் முத்தையும்அம்புயத்தையுமொக்குமென்றவாறு எங்ஙனேயெனில் அளகபாரத்துக்குமழைமேகமும்நெற்றிக்குப்பிறையும்-புருவத்துக்குவில்லும் கண்ணுக்குவேலும- காதுக்குவள்ளையும்- நாசிக்குஎள்ளின்பூவும்-வாய்க்குமிலவின்பூவும்- நகைக்குமுல்லையும்-முகத்துக்குமதியும்-கழுத்துக்குச்சங்கும்- தோளுக்குமூங்கிலும்- முன்கைக்குயாழும்- உள்ளங்கைக்குத்தாமரையும்-விரல்களுக்குக்கெளிற்றுமீனும்-நகங்களுக்குக்கிளிமூக்கும்.

கொங்கைகளுக்குக்கலசமும்-வயிறுக்குஆலிலையும்-அவ்வயிற்றிலுள்ளவுரோமவொழுங்குக்கெறும்பூக்களும்-புருவம் அவ்வயிற்றிலுள்ளவரைக்கும்-நீர்த்தரங்கமும்இடைக்குத்துடியும்-பரட்டுக்குத்தராசும் குதிக்காலுக்குப்பந்தும்விரலுக்குப்பவழமும்-கந்தரத்துக்குமுத்தும்-உள்ளங்காலுக்குத்தாமரையையும்-இவ்வகை யுவமானங்கண்டுகொள்க. (௫௬)

கைக்கிளை-மருட்பா

தாளிரண்டும்பாரென்றுங்கார்வாடும்வேர்வாடும்
வாளிரண்டுக்காதிரண்டில்வந்திமைக்கும்-கோளிரண்டும்
ஐவகைப்பூதமமைத்தருளரங்கர்மையவளர்சோலைமலையில்
தெய்வமல்லளித்திருவுருவினளே.

(எ-து) இரண்டுகாலும் பூமியிலேபொருந்துதலினாலும்மாலை வாடுதலினாலும் வேர்வையாகுதலினாலும் வாளையொத்தஇருவிழியும் இருசெவியினிடத்தில் வந்துவந்திமைத்தலினாலுங்கோளிரண்டாகிய விராகுக்கோள் கேதுக்கோள் முதலாகிய கிரகங்களும் - பஞ்சபூதங்களையும் படைத்தருளிய வரங்கநாயகருடைய மைமேகந்தவழுஞ் சோலைமலையிலுள்ள தெய்வமாகிய அணங்கலாம் இவ்வழகியவடிவையுடையவள் பூதலமாதராக வேண்டுமென்று தலைவனறிந்துரைக்கவென்றவாறு. ()

ஊசல் எண்சீர்க்கழிநெடில்ஆசிரியவிருத்தம்,

உருமாறிப்பலபிறப்பும்பிறந்துஞ்செத்தும்
ஊசலாடுவதடியேனுழியும்வண்ணம்
கருமாயத்தென்னெஞ்சைப்பலகையாக்கிக்
கருணையெனும்பாசத்தைக்கயிறுப்பூட்டி
மருமாலைத்துளவசையவாடிரூசல்
மணிமகரக்குழையசையவாடிரூசல்
திருமாதுபுவிமாதோடாடிரூசல்
திருவரங்கராஜரேயாடிரூசல்.

(எ-து) உருவமானது மாறிமாறிப் பலபலபிறவியாகிய யோனிதோறும்பிறந்துமிறந்து மூசலாடுதலையடியேனொழித்து விடும்படிக்குக் கருமையாய்மாயையோடுங்கூடின யென்னெஞ்சைப் பலகையாகச் செய்து

தேவரீருடைய கருணையாகிய பாசத்தைக் கயிறாகப் பூட்டி நறுநாற்று மிக்க துளவமாலை பசைய ஆடக்கடவீர் இவ்வூசலை மணிமகரக் குண்டலங்களசைய ஆடக்கடவீர் இவ்வூசலைச் சிதேவி பூதேவியோடு வாடக்கடவீர் இவ்வூசலைத் திருவரங்கராசனே யாடக்கடவீர் இவ்வூசலையென்றவாறு ()

கலிவிலைவண்ணத் துறை.

ஊசல்வடம்போலூர்சகடம்போலொழியாமே
நாசவுடம்போடாவிசுழன்றேநலிவேனே
வாசவனும்போதாசனனுங்கூர்மழுவோனும்
நேசமுடன்சூழ்கோயிலரங்காநெடியோனே

(எ-து) ஓடியோடிவருவளவும் போவளவுமான சற்கயிறுபோலுமூரப்பட்ட சகடக்காற்போலுமோய்வில்லாமல் அனந்தஞ்செனனங்கடோறுமெடுத்தெடுத்துநசிக்கப்பட்டவுடம்பினுடனேகூட ஆவியானது சுழன்றுநலியக்கடவேனோ வாசவனாகிய இந்திரனும் போதாசனனாகிய பிரமதேவனும் அரிய மழுவாயுதத்தையுடையவுருத்திரனும்நேசமுடனே சூழ்ந்து துதிக்குங்கோயிலாகிய அரங்கத்தையுடையவனே நெடிய மாலானவனேயென்றவாறு.
(௫௧)

தனமூ கட்டளைக்கலித்துறை.

நேசத்தழைக்குமதயானைமுன்புநின்றோனரங்கம்
பேசத்தழைக்குமென்னன்பனையாய்பெருங்கற்பகத்தின்
வாசத்தழைக்குநறுந்தழைகாணிதுமந்தத்தென்றல்
வீசத்தழைக்குந்தழைபோற்கெடாதுவிலையில்லையே.

(எ-து) அன்பினாலே ஆதிமூலமென்றழைக்கமதயானைமுன்னே வந்துகாத்தவருடைய திருவரங்கத்தைப்பேசுந்தோறும்பேசுந்தோறுஞ்செழித்துத்தழைக்கப்பட்டவென்னுடைய நண்பையொத்தவனே பெரியகற்பகவிருட்சத்தினுடைய மணம்பொருந்திய தழையைவிட இது நறுநாற்றமிக்கத் தழைகாணுகலாலமந்தமாருதம்வீசத்தழைக்கும்மற்றமுள்ள விருட்சத்தின் தழைகளைப்போலக்கெடாது அதுவுமன்றி இதற்குவிலையுமிவ்வளவென்று மதிப்பில்லையென்றவாறு. (௫௨)

எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்,

விலையானதிலையென்றுநீதந்தமுத்தம்
வேய்தந்தமுத்தாகில்வெற்பாவியப்பால்
இலையார்புரைபள்ளிநாராயணன்பால்
எந்தாயரங்காளிரங்காயெனப்பொய்த
தலையாலிரக்கும்பணிப்பாய்சுமக்கும்
தன்றாதையவர்தாமரைத்தாள்விளக்கும்
அலையாறுசூடும்புராணங்கள்பாடும்
ஆடும்பொடிப்பூசியாநந்தமாயே

(எ-று) நாயகனேசொல்லுவாயாக இதற்கு விலைவிடப்பட்டாதென்று நீகொடுத்தமுத்தத்தைவேயீன்றமுத்தேயாகில் அதுவிலைபடாதப்பு னலிலேதுயிலங் கொண்டருளிய ஸ்ரீமந்நாராயணனிடத்திலேபோ யெனக்குத்தாயானவனே அரங்கனே இரங்கவேணுமென்று கபாலத் தைகையிலேந்தியிரக்கும் பாவமாகியபாயலைச்சுமக்குந் தன்தாதையாகிய பிரமதேவனானவன் அவருடையபாததாமரையைவிளக்கப்பட்ட அலை யாறாகியகங்கையைதரிக்கும் புராணங்களையெல்லாம்புகலும் பொடி யாகியநீற்றைப்பூசிக்கொண்டு ஆனந்தமாகநின்றாடவும் ஆடுமெய்த்தன் மையென்றும்ன்மையால் அம்முத்தமன்றெனறவாறு (இ)தன்கருத்து வேயீன்றமுத்தமெனபது யீசுரனுகையலவா விஷ்ணுவினிடத்திலே செய்தமையைவிநோதமாகவிரித்தாரென்றறிக (௬௧)

தவம்-கட்டளைக்கலித்துறை.

ஆனந்தமாயரங்கர்க்கேயுயிர் களடிமையென்னும்
ஞானக்கதவைம்பொறி வாசல்சாத்திநந்தாளைப்பற்றி
ஈனந்தரும்பாவமற்றொன்றுமயானெனதென்றமயி
மானந்தவிர்ந்திருப்பார்க்கிதுபோலிலைமாதவமே.

(எ-று) ஆனந்தமாகியபேரின்பத்திலழுந்தியரங்கனுக்கேஉயிர்களா கியஆன்மாக்கள் அடிமையென்றறிவத்தக் ஞானமாகிய கபாடத்தினை மேவைம்பொறியாகியமெய்-வாய்-கண்-மூக்கு-செவியென்னும் வாயல் களையடைத்துக்காத்தைநல்கும் நளினமாகிய தாளைபிடித்திட்டு வினை த்தைத்தகளினை ஆசாபாசமானபற்றேதுமின்றியானெனதென்னுஞ் செருக்குமுதலாகியமானுமிமானங்களை தவிர்ந்திருக்கத்தக்கா வர்களுக்கினைதப்போவொத்ததவமியாதொன்றும்இல்லையென்றவாறு.

இதுவும் அறுசீர்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

மாதவங்களென்றோர் தவங்களில் மருவுசீவனென்றொருவனீபெரும்
பூதமல்லெல்லையிந்திரியமல்லையைம் புலனுமல்லை நற்புத்தியல்லைகாண்
சிதரன்பரங்காமனவாமனன் திருவரங்கனுக் கடிமையீயுரைக்
கேதுமில்லையெனறறியர்தபின் எதின்மாதவ மில்லையெங்குமே-

(எ-று) பெருமைமிக்கதவங்களென்றுசொல்லப்பட்ட அவங்களிலே சீவனென்றுமருவப்பட்ட ஒருவனைகேளாய்மேவுதற்கு நீவர்துபஞ்சபூசமுமல்லபஞ்சேந்திரியமுமல்ல ஐம்புலனுமல்ல அதுமன்றி இப்புத்தியுமல்லவேகாணுமகையால்சிதரனென்றும் வாமனனென்றும் சிறந்த திருவரங்கேசனுக்கே அடிமையானேன எனக்கே தொருகுறையில்லையென்றறி இப்படியறிந்தாயாகிற்பினபு இதைவிட மாதவமானதேதொன்று மில்லையெனறவாறு.

(௬,௯)

இரங்கல்-கட்டளைக்கலித்துறை.

எங்காந்தகங்கை நல்லீரேரன்செய்கே னிரண்டேந்திடைமார்
தங்காந்தனென்றறிந்தாலு நில்லாது தனைக்குநெய்கும
அங்காந்தசெம்பவளத் தெமபிரானரங்கன்புயங்கள
செங்காந்தமால்வரைரோ விரும்போவென்றன் சிந்தனையே.

(எ-று) உம்முடையகாந்தானாகிய அங்கையையுடைய நங்கைமீர்களேகேளீர்யானென்னசெய்யப்போறேன்எநதிறையாராகிய ஆபணங்களுடையசீதேவிக்கும் பூதேவிகருங் கணவனென்றறிந்தேனுயினும் என்சிந்தையானயானதுகரித்து நிற்பதில்லை தயிரையுண்பதற்கும் நெய்யைக்குடிப்பதற்கும்அண்ணாந்த செம்பவழம் போன்றதிருவாய்மலரையுடைய எம்பிரானாகிய அரங்கநாயகருடைய திருப்புயங்கள் செவ்விதாயுன்னிதமாகிய காந்தக்கல்மலையோ எனனிகையமானதிரும்போவென்றவாறு. இன்னங்காந்தத்துக்கு மிரும்பிற்கும் கண்டளவே கலப்பது காரணமாதலால் செங்காநதமால்வரையோ இரும்போவெனதன்சிந்தனையேயென்றுரைன்பது

கலித்தாழிசை.

சிந்தையிற்குடி கொண்டிருந்து திருக்கருத்தமைநக்கொளும்
திருவரங்கர்பொருப்புயர்ந்த திருப்புயம்புகழ் களியரோம்
புந்திபிக்கது வருதபுக்கது மோதமாதர்களெழுவர்தம
பூசையேமக பூசையென்றதுபுதமையன்றிது புத்தர்காள்

அந்தரத்திமையோரருந்துமருந்தும் வெள்ளையதன்றியே
அறிபசாதி கொளாதிமானிட ரகலிடத்தினு மில்லையே
மந்திரத்தினி லாததேவதை வானகத்தினி லில்லையே
வடிவிலாதவை யண்டகோளம் வளைந்தவைப்பினுமில்லையே

(எ-து) புத்தர்களேயாருங்கள் புகலக்கேளீர் சிந்திப்பவருடைய சிந்தையிலே குடியாய்விட்டு நீங்காமலிருந்து திருக்கரமாகிய அஞ்ஞானத்தையறுத்தாட்கொண்டருளாநின்ற திருவரங்கேசருடைய வரையிலுமுயர்ந்தபுயங்களைப்புகழ்ந்துகொண்டாடும் களிப்பையுடைய களியானாங்கள் மனதுக்கிடமிருந்த மகிழ்வானதுவகுது வாய்த்தது அதேதென்றால் சததமாதர்களுடையவாம் பூசையேபெரிதாகிய பூசையென்பது அதுவேவமாய்நடக்கின்றதல்ல அஃதெப்படியென்னில் விண்ணுலகிலுள்ள விண்ணவரும் போசிக்கப்பட்ட அமுதமும் வெள்ளைதான் அதுவுமன்றி அரிதாகிசாதிகொள்ளாதமானிடர் அகண்டபூமியினிடத்திலேயில்லை அதுவுமன்றி பெருமைமிக்க மந்திரத்தில் வசபபடாத தெய்வங்கள் வானுலகத்திலுமில்லை அதுவுமன்றியொருவடிவில்லாத வஸ்து இந்தஅண்டகோளமவளர்ந்த வைப்பிலேயுமில்லையென்றவாறு இதன்கருத்து தேவரமுகம் அதுவும் நிறமொன்றாகையால் வெள்ளையென்றார் சாதியென்பது களவர்கையால் களருக்குடியாதவருலகத்திலில்லையென்றார் வடிவென்பது மதுவாதலால் மதுவில்லாதவஸ்து அண்டகோளவைப்பினுமில்லையெனருமென்று இத்னுள்ளுரைகண்டுகொள்க

௬௫

குறளடிவஞ்சிப்பா இவைபத்தொன்டதும் வஞ்சிஅடிகள்

இல்லறமெனத்துறவறமெனச் சொல்லறம்பிறதுணையன்றெனப
பவக்கடலுட்டுவக்கறுப்பான் காவுரியினடைப்பூசிரியெழில்
சிலமந்திகள்சினைதாவப் பலதெங்கின்பழக்கிலையுதிர
அடர்கமுகின்மிடறொடிதாத் தேமாங்கனிசிதறுவீழ
முடப்பலவின்குடக்கனியுக அரம்பைக்கனிவரம்பிற்புக
வயன்மருங்கின்மலர்ப்பொய்கையுள் துயில்வலம்புரிதுண்ணெனவுறத்
தா அட்டாம்மரைத்கவிசுறைகரு ஊட்டோதிமம்பேளட்டு _னேழ
யித்சேவனமனங்கமளிபபக் குயித்பேடைக்குலமொலிப்ப

மழைமுகிலெனமுழவதிர்தரு திருவரங்கப்பெருநகருள்
அரவணைமிசையறிதுயிலமர்ந் தருள்புரி இருதனிச்சொல்

இருசீரடிமேனிசை ஆசிரியச்சுரிதகம்

திருநாரணனைச் சேர்ந்தனம்
சரணாரவிந்தஞ்சமென் றிருந்தே

(எ-ளு) இல்லறமெனவுந் துறவறமென்று துறவறமென்றுஞ் சொல்லத்தக்க அறமுதலானதெல்லாந் துணையல்லவென்று பிறவிகடலினது வந்தனையைய க்குமபொருட்டாயக்காவேரியினிடத்திலே பூவிருந்த பூங்காவிற்சிலகுரங்குகள்கிளைகளிற்றுவும்போது பலபல தென்னம்பழக்குலைகளுதிரவும நெருங்கின கமுகமரங்களினிடமாக வோடியவும் இனியதேமாங்கனிகளுடனே சிதறியபூமலர்கள்விழவும்முடம்பட வளர்ந்த பலாமரத்தினுடைய குடம்போன்றகனிகளுதிரவும வாழைக்கனிகள்வரம்பிலேபுகவும்வயலினது மருங்கினமலர்ப் பொய்கைக்குள்ளே துயிலப்பட்ட வலம்புரிசங்கமானது இடக்கிட்ட இரவுந்தாளையுடைய தாமரைத்தவிசிலே யுறையப்பட்ட குட்டியையுடைய அன்னமானது பெட்டையன்னத்துடனே யெழுந்திருக்கவும் மயிற்சேவல்மனங்களிக்கவும் குயிற்பேடைகுலமொளிப்பவும் மழைமேகம் போல முழவதிரப்பட்ட திருவரங்கமாகிய பெரியநகரியினிடத்திலே யரவணைமேலே யோகநித்திரையமர்ந்தருளிய வழகிய நாராயணனைச்சேர்ந்தனங்காண் அவருடைய சரணம்புயத்தைய தஞ்சமென்றறிந்தென்றவாறு ௯௫

மடக்கு எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்

இரவியையிரவின் மதியினைமதியுள்
இறையினை யிறையுமெண்ணரிய
கரவனைக்கரவின் முனிவனைமுனிவர்
கருத்தனைக்கருத்தனை தடைத்தான்
பரமனைப்பரம பதத்தனைப்பததலுட்
பாரனைப் பாராத்துாதுர்
அரவணையரவி னரக்கனையரங்கத்
தடிகளையடிகள் சேவியுமே

(எ-து) இரவானவனை இரவினிலியங்குமதியானவனை மதிக்குளுறையப்பட்ட இறைவனுனவனை இறையுமெண்ணுதற்கரிய கரவானவனை காரணைவமுனையப்பட்டவனை முனிவர்கள்க்ருத்தைவிட்டுக் கடவாதவனைகருவைதத்துடைதது ஆளப்பட்ட பரமனுனவனை பரமபதமாயுள்ளவனை பதததுளடங்கபபட்டபாரையுடையவனைப் பாரெல்லாமபாவிப்புகழப்பட்டவோசையாகிய வரவத்தை யுடையவனைக்கண்டு அவர திருவடிகளைச்சேவியுங்களென்றவாறு (அடிகள்சேவியுமென்ற துமகததுவாக்கனே சேவியுங்களென்றுமாம் கூஎ

இரு பனிக்காலம் கலுழிலேந்துறை

சேவிக்கவாழ்விக்கு மெங்கோனரங்கன் றிருக்கோயில்சூழ்
காவிற்கலந்தாசை தந்தேகினுர்நெஞ்சு கன்னெஞ்சமோ
வாவிப்புறந்தன்ன மேதோவரக்கண்டிலேன்
பாவிக்கனேகக் தனிக்காலமிந்தப பனிக்காலமே

(எ-து) கண்ணினும்கண்டுசேவிக்கப்பெறில்வாழ்விக்குமெமக்கிறைவியாகிய அரங்கநாயகனுடைய கோவிலைச்சூழ்ந்தகாவில் கூடிக்கலந்திருந்துகனவிலும்பிரியேனெனறுகாதலைக்கொடுத்துப் போனகாதலர்நெஞ்சமானதுகன்னெஞ்சுதனுயிருந்ததோ தடாகத்தின் பக்கததேசஞ்சரிக்காநின்ற அனைனங்காலின்நேர்வரைக்கு மேதுகாரணமாகவோவரக்காண்கிலேன்பாவியெனக்கு இந்தபணிக்காலம பின்னிடுகிறது அநேகங்கோடிகாலங் தனித்துருநது தவ்ளுதற்கரிய நெடுங்காலமாயிற்றென்றவாறு. கூஎ

குறம்-அறுசீர்க்கழிநெடில்-ஆசிரியவிருத்தம்.

காலமுணர்ந்த குறத்தினுன் கருதினையொன்றது சொல்லுவேன
பாலகனுச்சியி லெண்ணெவார் பழகியதோர்கலை கொண்டுவா
கோலமலர்கையின் மங்கைகின் கொங்கை முகக்குறி நன்றுகான்
ஞாலமுவந்திட நாளையே நண்ணுவை நம்பெருமாளையே.

(எ-து) நான்திரிகாலவர்த்தமானமுந்தெரிந்தகுறத்திகாண்வாரும்பெண்ணேநீநெஞ்சிலேயொன்றுநினைத்தாம்அதைநிசமாய்ச் சொல்லுகிறேனஎன்னுடையபாலகனுக்குச்சிக்குஎண்ணெய்வாரும் பழமையாகிய வுடையுத்தரியமுண்டாகிற்கொண்டுவாரும்அழகியமலரால்நிறைத்

த அளகபாரத்தையுடையமங்கையேஉன்னுடையகொங்கையின்முகக் குறிநன்மையயிருக்கதுமாண அதனுலிக்தனாலருமுதும உவப்பெய்தும் படிக்குநாளைத்தனேயணையக் கடவைநம் பெருமானை யென்றவாறு-

(௬௯)

மேகவிடுதூது-கட்டளைக்கலித்துறை.

பெருமாலையார்க் குரைபபேனுமககே விண்டுபேகினால்லால்
மருமாலையாயெழுங் கார்குலங்காள் தொண்டர் காற்பொடிதன்
திருமாலைகொண்ட திருமலரங்கர்தந் தெய்வத்தாழடாய்
மருமாலைவாங்கி வயயின்னந்திமாலை வருமுன்னமே

(எ-து) நான்கொண்டபேராசையைகரிய வொழுகாபேழாநின்ற கார்குங்கால்உங்களுக்கேவாய்விட்டுரைப்பதல்லாமல் உங்களையன்றி மார்க்குறைக்கப்போறேனதொண்டரடிப்பொடியாழ்வார்சொல்லியருளியதிருமாலையைக்கொண்டருளியதிருமாலாகிய அரங்கருடையதிவ்வியமாகியமண பொருந்திய திருந்துழாயமாலையைவாங்கிவாருங்கள்-அந்திமலையானதுவருகிறதற்குமுன்னமேயென்றவாறு.

(௭௦)

நேரிசைவெண்பா.

முன்னம்பிறந்த பிறப்போ முடிவில்லை
இனம்பிறப்பிக்க வெண்ணுதே-தென்னரங்கம்
மேவிக்கிடந்தானே வீற்றிருக்குநின் பதத்தென்
ஆவிக்கிடந்தா னருள்

(எ-து) அடியேன்முன்னேபிறந்தபிறப்பிறகுஇவ்வளவென்றெரிதுமுடிவில்லை ஆகையாலின்னமும்பிறந்திறக்கும்படிக்குஉமது திருவுளத்திலெண்ணவேண்டாம்திருவரங்கத்திலே சேஷசயனத்தில்திருக்கண்வளர்ந்தருள்பவனேயுனதுபாதத்தாமரைநிழலிலேயடைந்து வீற்றிருக்கும்படிக்கெனது ஆவிக்குமிடந்தந்தருள் விராகவேணுமென்றவாறு.

(௭௧)

இரல்-ட்டக்கு அறுசீர்க்கழிநெடில ஆசிரியவிருத்தம்.

அரும்புன்னைகதடங்காவே அவாவென்னைகத தடங்காவே
அமபொருசக்கண் பொருந்தேனே-அழுநிருசக்கன் பொருந்தேனே

பாம்புங்கடலூர்நாவாயே-பாவிக்கடலூர்நாவாயே
பார்மீதுயரமறியலையேபடுமெனதுயரமறியலையே
கருங்கட்கயலேமாசுறலே-கரைவேறகயலேமாசுறவே
கண்டறபோதுகுவாலுகமே-கண்குறபோதுகுவாலுகமே
குருப்பதமழைக்குங்கரும்பனையே-குயில்வந்தழைக்குங்கரும்பனையே
குருகீர்நந்தமங்கனையே-கொணரீர்நந்தமரங்கனையே

(எ-து) அரிகாகியவிசாலமாகிய புன்னாகவனமே யான்கொண்ட ஆசையானது என்னிதயத்தி லடங்குகிறில்லை தாமரையி னிடத்திலே பொருந்தினவண்டேயானமூகநீறது தொழுகையினுங் கண்ணுறக்க கொள்ளவில்லையேபாவிகடலிலேயோடாநின்ற மரக்கலமேபாவியே னுக்குநாவுமாவாவுமலர்தூற்றுகின்றது நிலனுறசுடுந்தன்மையாகுதபூ மிமீதுயர்நனவிழாநின்ற அலையேயான்படுந துயரங்களையறிய யில்லையேகருமையாகியகண்ணையுடையகயலே பெரியசுறுவேலகனாந துருகப் பட்டவெனக்குஅயலாரோ டொத்திருந்தார்கள்மாசான மறவினருந் தாழம்பூவுகாநின்ற வெண்மறைகுன்றேகக்குலாகியவேலார் பொழுது செல்வதுஅனேகயுகராசிசெல்வசென் னும்படிக்காகின்றது குருபமை யானதழைக்காநின்ற பரியபனையேகோசிலமானது சரும்பனைகியகா மவேளைவரக்கூவுது ஆகையால்நருகாகிபட்சிகள் கங்குகளமப்பட்ட அழகியகரையே நம்முடையவரங்கநாயகரைக்கொண்டு வருவீராகவே ண்டுமென்றவாறு.

(உஎ)

இதனுள்பத்துததாமரைகளும்ஒன்பதுஅதிசயங்களுகாண்க.

நேரிசைஆசிரியப்பா

கனைபொருதொழுகுங்காவிரியாறே
ஆற்றிடைக்கிடப்பதோரானந்தலையாவே
உரகஞ்சுமப்பதோரஞ்சனமலையே
அம்மலைபூத்ததோராவிந்தவனமே
அரவிந்தமலர்தொறுமதிசயமுயவே
கடல்விளிப்புடுத்தகண்ணகனாலம்
உடனமுழுகலந்தவொருதாமரையே
விளம்பிறையான்வார்சடைதத்தங்கப
பகிரதிகாலதோர்பங்கேருகமே
யானையும்யானையும்படைக்காளமுகக்

கோவையீன்றதோர்கோங்கமே
திருமகட்கினியதிருமனையாகிப
பருமணியிமைப்பதோர்பதுமமலரே
சடைத்தலைதாழ்த்துச்சங்கரனிரப்ப
முடைத்தலைதவிர்த்ததோர்தோர்முளரிமாமரே
ஆங்குமண்டோதரியணிந்தமங்கலநாண்
வாங்கவில்வாங்கியவனசமுமொன்றே
விரிந்தபுகழிலங்கைவேந்தர்க்குதவதென்றிசை
புரிந்தருண்மலர்த்ததோர்புண்டரீகமே
மண்டினிருலமும்வாமுமுட்பட
அண்டமுண்டுமிழ்ந்ததோரம்போருகமே
கடைசெவந்தகளாருகருமணிவிளங்கி
உடைசிலவுரிபரந்தினியவாய்கெடியலாய்
இன்பந்தழீஇயவிருபெருங்கமலம்
துன்பந்தழீஇயதொண்டனேனையும்
உவப்புடனொருகாநோக்கிப்
பவக்கடல்கடக்கும்பரிசுபண்ணினவே.

எ-து) இருக்கரையுமோதிப் பச்சிமவாக்கினியாய்வாராநின்ற காவேரியென்றோராறுண்டு அந்த ஆற்றினிடத்திலேஐந்துதலையையுடையவொருநாகங்கிடக்கும அந்தநாகமானது சுமக்கப்பட்ட வொரு நீலமலைஅந்தநீலமலையானதுசெந்தாமரைவனமாய்ப் புஷபிக்கும அப்படிபுஷபித்த செந்தாமரைமலர்கள்தோறும ஒவ்வொருஅதிசயமுண்டு அதிலேமுதலாவது கடலேஆடையாகச்சூழவுடுத்தவிடமகன்ற வுலகமுடனெல்லாமளந்த வொருதாமரையெனனவே வலத்காலாகுது இரண்டாவதுவளர்ச்சியாகவளர்ந்ததுபோன்ற இளம்பிறையைத்தரித்த அரனுடையநீண்டசடையிலே நிரம்பக்கன்னகையுமிழ்ந்த வொருதாமரையென்னவே இடக்காளாகுது மூன்றாவது உயாதிணையஃறிணையாகிய சராசரங்களையுண்டுபண்ணுமபெருட்டாய் நாணகுழுமுகமுடைய பிரமதேவனைபபெறறவொருதாமரை யென்னவே உந்திக்கமலமாகுது நான்காவதுசிதேவிககுஅழகியவீடாய்பெரிதாகிய கவுஸ்துபமெனபபோபெற்றமணிவிளங்கப்பட்ட ஒருதாமரையெனனவே மார்க்கமாவது ஐந்தாவதுசடைமுடிசங்கரனுனவனிரந்தபவந்தவளவில்முடையாகியதுற்கந்தமாகியபிரமகபாலமவர்கைவிட்டகலச்செய்த வொருக

சேனூர்திருவரங் கேசனுறதிகிரியும்
இலகுவெண்சங்குமே யுலகமெங்கெங்குமே

(எ-து) ஆசையாகிய அடியார்கள் இதயமல ரிடத்திலே சேர்ந்தாகி யதிருவடித் தாமரைகளும பசுமையுடைய பீதாம்பரமுமசெவ்விதா யழகிய திருமேனியும் பொற்றாமரைப் பூவிலுறைப்பட்டவள வாச மாகியமார்பகலமும பரமென் றடைந்தவர்களைப் பயப்படாதிர்க ளென்றருள் புரியுங்கராமபயமும் கைகளையாகிய தாமரைப்பூவும ஒளிவிளங் கிய திருமுகமும் மாசிலாத புன்முறுவலும் சிரிதாயெழுதியகஸ்தூரி நாமமும எனககிறைவனாகிய திருவரங்கேச ருடைய சக்கராயுதமும்- இலப்பட்ட வெள்ளிய சங்கமுமே தெரியப்பட்டது உலக மெங்கெ ங்கும்-எ-று ௭௪

வஞ்சிவிருத்தம்.

எங்கணு நிறைந்துறையு மெம்பிரான்
கொங்கணுகி வண்டுமூறல் கோயில்சூழ்
உங்கள்வரை யெங்கள்வரை யொனறியே
மங்கையுன கொங்கைகளை மானுமே

(எ-து) எள்ளுமெண்ணெய்யும்போ லெங்கெங்கும்நிறைந்துறைய ப்பட்ட எம்பிரானாகிய வரங்கருடைய சுகந்தத்துக்காயடைந்துவண் டிணங்கள்சந்திக்கபபட்ட திருவரங்கத்தைச் சூழ்ந்த உங்கள் மலையி ன்இடமும் எங்கள்மலையின்இடமும் நெருங்கியிடமணித்தா யிருப்ப தெத்தன்மைத் தென்றால் மங்கையேயுனது கொங்கையாகியமலைகள் ஒன்றோடொன்று சமீபத்திருப்பதுபோலிருககும எ-று ௭௫

இரங்கலசலிகிலைத்துறை.

மானூர்கேசன் மேலார்மாலாய் வருங்கோயிலில்
தேனூர்காவிற பூவாராயுந் தேனேபோல
கானுபாகததின் பங்கண்டாயான்வாடப்
போனூர்வாரா தேதோழிதாய் போதாவே

(எ-து) கங்கையாகிய பெண்ணானவள்ளந்த சடாகேசததைவனை டையவன் முதலால்மேலோரியாரும் அபரணடைந்துவாழுந் திருவரங்கு

திவைர் சரணமென்றவருக் காணமாயஞ்சாதியென றளிக்குந்தாயிலு மெண்டிடங்கதிகமாகிய அன்பினையுடைய அரங்கராயசருடைய கோயிலின்பக்கத்திலே மேகாலமும வண்டினமுக் தாயின்மேவம் பூங்காவில் வல்லிமாகிய ஒருகொடியுண்டு அதிலே இரவிகுலகரு வியாமல்மலருந்தாமரையுங்கண்டு அதிலே ஆலகாலவிஷமுமண்டு அந்தஆலகாலவிஷத்திலே ஒருகள்ளத்தனமுமண்டு அதெகன்னுள்ளதனை யுண்டுவிட்டது-எ-று. ௮௩

முதுவேனிற்காலம எண்சீர்க்கழிநெடில்ஆசிரியவிருத்தம்

உண்மிழ்வாசமுடன் றண்டலைமருகம்வந்
துலவியசாரளமுங் குலவியவானிலாவும்
விண்டலர்பூவணையும் மென்பனிநீர்புழுகும்
வேனிலுமேமுதிரா வேனிலுமாகியதால்
அண்டத்தொழும்பெரு மாளம்புயமின்பெருமாள்
அருமறையின்பெருமாளழகியாம்பெருமாள்
புண்டரிகங்கமழுந் தண்டுறையோகிமமே
புன்னைகள்சிந்தலரோ யின்னமும்வர்திலரே

(எ-து) தாமரைமணக்குந தடாகம்பொருந்திய நீர்த்துறையிற் றங்கியவன்னமே புன்னைத்திலுதிருநின்றபூவே சொல்லக்கேளீர் உண்டுமிழப்பட்ட மனத்தினுடனே தண்டலையாகிய காவிமறவழ்ந்துமந்தமாருதமானது உலவுகின்ற சாளரவாயலுங் குலாவப்பட்டஒளிபொருந்திய நிலவும் முகிழ்விரித்தபூவினாற் செய்தவணையும் மெல்லியதாகியபன்னீரும் புனுகுசவ்வாதுமேவலாகிய இரண்டு காலத்திலும் முதிரவேனிலாகிய இளவேனிற்காலமுமாகியதன்மையால் தேவர்கள் தொழப்பட்ட பெருமானானவர் அம்புயமினளாகிய இலக்குமிகடாக்ஷாணவர் வேதத்துக்குநாயகனானவர் அழகன்மிக்க நம்பெருமாளானவர் இன்னம்வரக்காணகிலேன் ஐந்துசெலவேன் எ-று ௮௪

௯ திரிகாலம் வெற்றொலிவெண்டுறை

இன்னிசைமேயினோர் மன்னியகோயிலெய்தார்போற்
பொன்னினாலவற் போனவிடத்தினிற்போகாதோ
மின்னிமுறுகிற்றனீ யென்றன்மேலெலாம்
வன்னியின்பொறிகள் வழங்குமவாடையே

(எ-து) இனியஇசையைப்பொருந்திய வேய்ங்குழலையுடையவனிலை யைபற்றதிருவரங்கத்தி லினிதுமேற் படாதவன்றூ போ றும்பொரு சேடுமகினைவிறைறலைவரானவற்போலவிடக்கில் போகமாட்டாததி ன்னப டடையேகமுமழையும் ஒன்றுமென்மெய்முழுதும் நெருப்பின் பொரிசலைவழங்கப்பட்டவாடையானவிக் காற்றென்றவாறு. ௮௫

காற்காலம அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம

வாடையாயிரு பணியு ளாயவேனிலாய் வந்ததுகாரெனவே
பேடைமாமயிற் சாயலாயன்பாமேற் பிறைகருதிடல்செம்பொன
ஆடைநாயகன் திருமகணுபக ரரங்கநாயகனேறும்
ஓடைலாவிது மதமிதுபிளிறிய ஓலியிவிமழையென்றே

(எ-து) கூதிர்காலமும்முனபனிக்காலமும இளவேனிற்காலமும்மு திவேனிற்காலமுமாகிய ஐந்துபருவமும் கோய்இக்காரகாலமாகியப ருவந்துசேர்ந்ததென்று சாயலினுடேபெண்மயிலையொப்பாய்தலைவர் மீதுபிறைமீனையாகக்கடவதென்று பொன்னின்பீதாம்பரதனைத்தரி த்தநாயகன் திருமகளாகிய சிதேவிநாயகன அரங்கமாகியகோயிலுக்கு நாயகன் அவனேறப்பட்டபொற்பட்டங்கட்டிய நெற்றியினுடைய ளையிதுமேகமன்று மதஜலமிதுமழைநீயெனறுபிளிறிடப்பட்டஓசை யிதுஇடியோசை அன்று ஆனையாமழையன்றுளன்றுமமறுததது-எ

கட்டளைக்கலித்துறை.

மழைபோன்மாகதம்போ லெம்பிரானவளர்கோயிலன்னீர்
பிழைபோமிவர்க்கிதை யாறுரைப்பாரிவற்பின் வந்தெய்த
தவிழபோயுரைத்த வறுத்தமபொறுமைகொள்சங்கரன்பால்
உழைபோயொதுங்க முயல்போமதிப்பிக் கொளித்ததுவே

(எ-து) இருண்டமழைமேகம்போலவும் மரகதமாணிக்மலைபோல வும்எனக்குப்பிராணனைவாகண்வளருந் திருவரங்கத்தை யொப்பீர்கள் குற்றந்தீர்க்க உரைக்குரையாறுரைக்கதக்கவர் யாவரென்றா லு மு கைக்கதக்கவரென்று ஆகலாலிவர்பினருகவந்து டர்ந்தெய்தமங் கையானதுசென்றுயட்டுறைகதவறுத்தப பொறுமையினுலன்றோ மானதூகாரனைகயிடமபோயொளிக்கவுமுயலானதுசந்திரனிடத்தில

பூவலரின்மணம்பரப்பி யிளவேனில்வரவந்த
பொதியத தென்றல்.

(எ-து)மேவலராகியபகைவருர்வாழப்பட்ட தென்னிலங்கையை மலங்கவொருகர மிருகோடியு மொருகொடியாய்வளைய வில்வளைதவெதய் யுமமயினில் வல்லவராகிய இடையருடைய வாயினுலூதும் வேய்ங்குழலோசையைப பசுவினங்களி செவியிலும்வொக்குங் கொஞ்சகதன்மை பொருந்திய புன்னமயாகிய மாலைபேராகிற புட்பிக்கபபட்ட பூவின் மணங்களைப் பரப்பிக்கொண்டு இளவேனிற்காலம் வருமலவில் வரவந்தபொதியமலைத்தென்றலாவ தென்றவாறு

இரங்கல் கட்டளைக்கலித்துறை

தென்றலைக்குங்குமச்சேற்றைப் பொருள்சிறியாள்பெரிய
குன்றலைக்குந்துடிக்கும்மென செய்வாயாரோலழைகத
வன்றலைச்குஞ்சரங்கத்தா யிலங்கைமலங்கவளைத்
தன்றலைக்குஞ்சரங்கத்தா யரங்காவண்டராதிபனே

(எது) தென்றலாகிய காற்றையுங் குங்குமமாகியசேற்றையும் பொறுக்கமாட்டாள் மிகவுஞ்சிறியதன்மையை யுடையவளாதலால் பெரிதாகியநெருங்கிய அலைகடலினது வோசைக்கு மனது துடிப்புமென் செய்தாற்றுவள் துன்பத்தினுலே மெய்யென்று வோலமிட் டழைக்க வன்மைபெற்ற தலையினையுடையயானையைஇரட்சித்தவரே இலங்கையானது கலங்கவளைத்துஅப்போதலைத்தபாணத்தை யுடையவனே அரங்கமாகிய நகரையுடையவனே தேவதேவாதிபனே தேவரீர் சித்த மிரங்கவேண்டுமென்றவாறு

கட்டளைக்கலிப்பா

அண்டர்போற்றுந்திருவரங்கேசனர்
அணியரங்கத் திருமுற்றமெய்தினுல்
பண்டுபோனவளை யாழிவாங்குவேன்
பாவியாதுபாராமுகம் மண்ணினுல்
தண்டுவாளுஞ் சிலையுமிருக்கவே
சங்குமாழியுந் தாருமென்பேணவை

(எ-று) துவசங்களாடப்பட்ட வைரத்தினமணிகளால் இழைக்கப்பட்ட மாளிகைகூட கோபுரம் இவைகளை அயோத்தியாபுரியைவிட்டு குடிவாங்கித் திருவரங்கமாகிய கோயிலினிடத்திலே குடிகொண்டருளிய செடிகாளவனே அடியேனுலாகவேண்டியமுயற்சியில்லாமல் உனது திருவருள்தானே பாருமென்று பார்த்திருந்த அடியேனொருக்காலும்வடிவதற்கரியபிறவிக்கடலை கடந்துபோய்மூலப்பிரகிருதியையுங் கடந்து அதற்கப்பாலாகிய வைகுந்தத்திற்சேர்ந்து உனதடியார் கூட்டத்துடனே கூடி உனது திருவடியின்கீழடிமை செய்யத்தக்க அக்காலமானது யெக்காலங்கிடைக்குமோவறிகிலனென்றவாறு

கட்டளைக்கலித்துறை

நீசச்சமணர்க்குஞ் சூனியவாதற்குநீதியற்ற
பூசற்பௌத்தர்க்குஞ்சைவர்க்குமியார்க்கும் புகலுகின்றேன்
நாசப்படாவுயிரெல்லாமுதற்றந்தருளுதனகண்ணமர்
ஆசற்றசீரங்கத் தாதிமூலத்தரும்பொருளே

(எ-று) நீசத்துவமான சமணர்க்கும் மாயாவாதிகட்கும் நீதியையற்ற பூசலாகிய போரையுடைய பவுத்தருக்கும் மற்றுமுள்ள எல்லாச்சமயவாதியருக்கும் எடுத்துரைக்கின்றேன் குற்றமற்றஸ்ரீரங்கத்திற்சிறந்த வணுதியாகிய ஆதிமூலமாகரும்பொருளானவனே அழிவில்லாதசகலசீவகோடிகளையுமுன்னமேயுண்டாக்கியவாதன் கண்ணுமென்றவாறு

நேரிசைவெண்பா

அரும்புண்டரீகத் தடியிணைக்கென்னெஞ்சம்
இரும்புண்டநீராக நின்றே விரும்பி
அறந்திருந்தன்கோயிலரங்காவுனைநான்
மறந்திருந்துமேற்பிறவாமல்

(எ-று) அரிதாகியதாமரையொத்த உனது திருவடிகளில்விருப்பமாய் என்னிதயமானது இரும்புண்டநீருக்கொப்பாய் மீண்டுக்கொட்யாய் மீண்டுவாராதென்றைக்கோ புண்ணியமானதுதிருந்தக்க மேநிலையுடையவரங்கனே உன்னைமறந்திருந்து இனிமேற்படப்பிறவக்கென்றவாறு

கலிவிருத்தம்

பிறவியெனுங்கடலழுந்திப்பிணிபசிசோகிந்திரியச்
சுழலனுங்கக்கொடுவினையின் சுழலகப்பட்டுழல்வேனோ
அற்றுடையாயென்னப்பா அரங்காவென்றுருகிருக்
குறவுடையாரடியேனை யுயக்கொள்வதொருநாளோ

(வ-து) பிறவியென்னப்பட்ட சமுத்திரத்திலேயமுக்கிப்பிணிப்பனியுடைமன இந்திரியமாகிய சுறுமீனுனது வழுக்கக்கொடியவினையாகிய சுழியிலகப்பட்டுச் சுழலக்கடவேனோ தருமசுரூபமானவனே யெனக்கு அப்பனானவனே யெனதுடைய நிறைந்தவுயிருக்குறவானவனே அடியேனையுமொருபொருளாயுய்யக்கொண்டருள்வதுக் கொருநாளுமுண்டாகுமோவென்றவாறு

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

ஒருபொருளல்லே னிருவினையுடையேன
　உனதுதொண்டெனுந்துறைகுளித்துன்
பெருகுதண்ணளியின் பாசங்கொட்டிழித்து
　பெரியதோர்முத்தியான்பெற்றேன்
திருவுமாமணியுஞ் சங்கமுமேந்திச்
　செய்யதாமரைபலபூத்துச
கருநிறமுடைத்தாய் நதிபொருதரங்கங்
　கலந்ததோர் கருணைவாரிதியே

(எ-து) அடியேன்யாதொரு தன்மையான பொருளானவனன்று இறக்கிறதும் பிறக்கிறதுமாகிய இரண்டுவினையையுமுடையேனுதலால் உனதடிமைத்திறமாகிய துறையினிடத்துச்சென்று குளித்துப் பெருகப்பட்ட உனதருளாகிய கயிற்றைப்பற்றியிழித்து பெரிதாயொப்பற்ற சங்காதியவன்னுமடையாள முத்திரையைப்பெற்றேன் ஸ்ரீதேவியும் பெருமைமிக்க கவுத்துவமணியுஞ் சங்குமும்விளங்கிய அவயவங்களாகிய பலபலரிவந்த தாமரைகளுமாமிக்கதுகரியவண்ணத்தையுடைய பொருந்திக் காவேரியாகிய ஆற்றினலேபொருதப்பட்ட வரங்கத்தினிடத்திற கலக்கருளிய வொப்பற்றவொருதனிமுதலாகிய கருணைக்கடலானவனேஎன் றவாறு (பின்னுமித்தேயுனாதிருவாகிய லட்சுமியும்பெருமைமிக்க புஞ்சங்குந்தாலமீச சிவந்ததாமரைகள்பலவும பூத்துக் கருநிறத்தையிற்புறப்பட்ட அலையோடுங்கலந்த கருணையுடையகடலே அடியேனொருபொருளாயுடையவனென்றுமிகவுமேழையேனு உனதுதொண்டனெனும் பெயரையுடையதுறையிற்குளித்துஅ ளமாராமற்பெருகிய விரகத்தைச்செய்யும்மாதரவாகிய வொப்பவலமுத்தென்னும் பிரயோசனத்தை யடைந்தேனென்று கடலுக்கு மாங்காகவுஞ் சிலவுடைசொல்லியவாறறிந்துகொள்க

யொத்த திருவடியே தஞ்சமென்றடைந்து வாழப்பட்டவர் எக்குலத்துள்ளாரினும் இழிகுலத்தோராயினும் அவர்களேயண்மை இமையோர் நாட்டத்தினையுடைய தேவர்களிலேயுஞ்சிலரையனென் றுரைக்கப்பட்ட விருவரிலேயுஞ் சிறப்பினையுடையவரென்றவாறு, ௱

கட்டளைக்கலித்துறை.

தரங்கத்தினின்றுதளருமென் றுவிக்குன்றுமமைத்தா
ளிரங்கித்தருவதெக்காலஞ்செல்வா வெழுபாருமுண்டு
பரங்கொட்டோராலினும் பசலாழியினும் பசுமையென்னிரு
ழரங்கத்தினுந்துயிலவாயச்சுதானந்தகோவிந்தனே

எ-து. தரங்கமாகிய அலைபோலலைந்து தளர்ச்சியையடையும் அடியேனுடைய வரவிக்காதாரமாக உனதும் தாராவிந்தத்தை யிரங்கித் தருவதெக்காலமோ சொல்வாயாக ஏழுலகமுண்டு அதின்கணந் தோன்றாமல் ஞாலவிலையேற்பாற கடலிற்றுயினும் பசுமை பொருந்திய காவேரி சூழ்ந்த திருவரங்கத்தினிடத்திலுந் துயின்றருளிய அச்சுதானந்தகோவிந்தனுன அரங்கநாயகனேயென்றவாறு பரங்கொட்டென்பதற்கு சகலபுவனசராசரங்களுக்கனது குட்சிக்குள் அடக்கிததானே பரமாயிருக்கானென்றுரைப்பினுமமையுமென்க. ௱௧

எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவண்ண விருத்தம்.

மழைமுகிலெனவேயனுழுதகந்திகள்
வரியரவணையேறியாழரங்கர்தம்
எழில்பெறுமிருதாளிலேகலம்பகம்
எனுமொருதமிழ்மாலைதானணிந்தனன்
குழலிசையளிமேவுகூரம்வந்தருள்
குருபரனிருபாதபோதடைந்தவன்
அழகியமணவாளதாசனெனப்பவன்
அடியவரடிசூடிவாழுமன்பனே.

எ-து. மழை மேகம்போன்ற வண்ணராய்ப்பருட்டிவையுடையவகிப்பொருந்திய பாம்பணையின்மேலறி இனிதாயமர்ந்திருவாழும் அரங்கநாயகருடைய கெழில்பெற்ற இருபாதாம்புயங்களிற்கலம்பகமென்னும் பாமாலை சாத்தியருளினன் குழலிசையுமலண்டிசையுமேவும்வளைந்த செறிந்தகூரமாகிய நகரிலுள்ள குருபரனுடைய திருவடிகளையடைந்த அழகிய மணவாளதாசனென்னும் பேர்பெற்ற அடியவருக் கடியவருடைய திருவடிச்சூடிவாழும் அன்பனுவனென்றவாறு. ௱௨

திருவரங்கக்கலம்பகம் மூலமும்-உரையும்.

முற்றிற்று.

பாடல் அகராதி-முற்றிற்று.

---